“கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு.”

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892௵ ஜூன்௴. இலக்கம். 2.

## வித்தியாப்பியாசம்.

எந்ததேசத்திலும் எக்காலத்திலும் நாகரீகத்துக்கு உண்மையான காரணம் வித்தை. நாகரீகமாவது மனிதன் சுகத்துக்குவேண்டியவைகளைத்தேடிக்கொள்ளும் சக்தியைக்கொடுக்கும் நிலைமை. மனிதனது சுகம் காலத்துக்குத்தக்கபடி வித்தியாசப்படும். அநாகரீகமான மனிதர்களுக்குள் சுக உணர்ச்சி அதிக மில்லை. மிலேச்ச ஜாதிகளுக்குத் தேகமறைய வஸ்திரம் வேண்டுமென்றுதோன்றுது. நல்லவீடுகளாவது, நல்ல உணவு முதலானவைகளாவது வேண்டுமென்ற உணர்ச்சி உண்டாவதில்லை. நாகரீகம்பெற்ற தற்கால மனிதஜாதிக்கும் நாகரீகமற்ற பூர்வ மனிதர்களுக்கும் இப்போது அந்நியதேசங்களில் வசிக்கும் மிலேச்ச ஜாதிகளுக்குமுள்ள வித்தியாச மிவைதான். புத்தித்தேர்ச்சிக்கும் சரீர சௌக்கியாபிவிர்த்திக்கும் வேண்டிய வழிபாடு சாதகங்களை இக்காலத்து மனிதர் ஓயாமல் தேடிக் கொள்ளுகிறார்கள். மனம்போனவழியில்விர்த்தியடைவதே லட்சியமாக உழைப்பது எப்போதும் இயல்பு. நாகரீகத் தேர்ச்சிபெற்ற ஜாதிகளில் பேர்போனவர்கள் ஐரோப்பியர். ஐரோப்பாவில் இங்கிலாந்து, பிரான்சு, ஜர்மனி, இடலி இந்த ராஜ்ஜியங்கள் முக்கியமாகப் பேர் போனவை. இத் தேசங்களின் ஜனங்கள் சுமார் ஐம்பது வருஷங்களுக்குமுன் இருந்த ஸ்திதியில் இப்போது இருக்கவில்லை. மனிதசமூக ஸ்திதிக்கு வேண்டிய எல்லா வழிகளிலும் வேற்றுமை அடைந்து வருகிறார்கள். துரைத்தனம், கைத்தொழில், வியாபாரம், உணவு, உடை, முதலியவைகளில் முன்னிருந்ததுபோல் இப்போதில்லை. ரயில், தந்தி, கைத்தொழில் யந்திரம், நீராவிக்கப்பல், மதம், கொள்கை முதலிய வற்றிலும் வேற்றுமையே உத்தேசமாக உழைக்கிறார்கள். ஊக்கத்தாலும் அறிவுநுட்பத்தாலும் புதிது புதிதான காரியங்களையே செய்யவேண்டுமென்ற அவாமேலிட்டு, பல அந்நிய தேசத்தாரோடும் தூரதேசத்தாரோடும் அச்சம் அருவெறுப்பில்லாமல் பழகித் தங்கள் நன்மையை விர்த்திபண்ணுகிறார்கள். நாகரீகம் பெற்ற ஜாதிகளுக்கு வேறு தேசத்தாரோடு பழகுவதில் சங்கோசமாவது அச்சமாவதில்லை. இவ்வாறு அந்நியசகவாசப் பலனும் தங்கள் புத்திப் பயிற்சியின் பலனும் அவர்கள் நிலை பலவிதத்தில் மாறிக்கொண்டே வரும். இவ்வாறு மாறுதலின் உத்தேசம் தங்கள் ஜாதியார்க்கும் பிரதிமனிதனுக்கும் சுகம் விர்த்தியாக வேண்டுமென்பதே யாம். ஏற்கனவே தனிகரானவர் இன்னும் தனஞ் சேர்ப்பர். ஏழைகள் ஏழ்மை குன்றிச் சீர்படுவர். தனவான்கள் ஏழைகளது துக்கத்தைநீக்க முயலுவர்; ஏழைகள் தங்கள் சொந்த முயற்சியினாலேயே திருந்தும் வழியை அவர்களுக்குப் போதிப்பர்.

இவ்வாறு ஐரோப்பிய தேசங்களில் நடந்து வருகின்றது. நடந்து வருவதற்கு வித்தியாபிவிர்த்தியே காரணம். நாகரீகமற்ற தேசங்

களில் ஜனங்களுக்குள் அறிவுபரவ வேண்டுமென்ற பொறுப்பு ஒருவர்க்கு முண்டாவதில்லை. ஐரோப்பிய தேசங்களில் நூறுவருஷங்களுக்கு முன்னால் படிப்புத் தெரிந்தவர் மிகவும் சொற்பம். அரசனைச் சேர்ந்த சிற்றரசர்களும் வர்த்தகர்களும் கொஞ்சம் படித்திருப்பார்கள். மற்ற சாதாரண ஜனங்கள் அனேகர் அக்ஷரமே தெரியாதவர்களாயிருப்பார்கள். ஏழைகளுக்குப் படிப்பே வேண்டியதில்லை யென்பது ராஜதந்திரிகளது அபிப்பிராயம். ஏழைகளுக்குப் படிப்புவந்தால் தனவான்களான மேல்ஜாதிகளை மதிக்க மாட்டார்களென்பதும் அபிப்பிராயம். ஏழைகள் பணக்காரர்களை மதிக்கவேண்டிய கட்டாயம் இல்லையென்பதும், எவனுக்கும் தன்மனவலியும் தேகவலியும் தன்னுடைய சுதந்தரம்; அவைகளால் உண்டாகும் நன்மை எவ்வளவோ அவ்வளவுக்கும் அவனுக்குப்பாத்தியமுண்டு; அந்தப் பாத்தியம் அவனவனுக்குக்கடவுள் அளித்தது; அதைத் தடுக்க அதிகாரம் எவனுக்குமில்லை: என்ற இந்தத்தாற்பரியம் பழையநாள் ராஜதந்திரிகளுக்கும் சட்ட நிரூபகருக்கும் உண்டானதில்லை. நம்மவர்களுக்கும் உண்டானதேயில்லை. அங்கிலேய ஜாதியார் இந்தத்தேசத்தில் நிலையூன்றின வரையில் கீழ்ஜாதிகளுக்கு அறிவுப்பேறு அளிக்கவேண்டுமென்ற பொறுப்பாவது எண்ணமாவது நம்மரசர்க்கு உண்டானதேயில்லை. அரசர்களும் அவர்கள் மந்திரிகளும் தங்கள் சகவாசயோக்கியமான உயர்வகுப்பினருக்குமாத்திரம் ஞானம் உண்டாக்கக் கவலை கொண்டவரோயன்றி மற்றத் தாழ்வகுப்பினருக்கு மடமையேஇலட்சணம் என்று ராஜ்ஜியபாரம் பண்ணிவந்தார்கள். அரசர்களுக்கு ஆலோசனை சொல்லிவந்த பிராமணர்களும் இந்த அபிப்பிராயத்தை வளர்த்து ஸ்திரப்படுத்தினார்கள். ஹிந்துதேசத்தில் முற்காலத்தில் படிப்புத் தெரிந்தவர்கள் யார்? பிராமணர்கள்வித்தியாப்பியாசப் பிரயத்தனம் செய்வர். சூத்திரர்களிலும் சிலர் செய்வர். சூத்திர அரசர்கள் தலையெடுத்த காலத்தில் சில சூத்திரர்களுக்கு மதசம்பந்தமான நூல்களைப் படிக்க வழி உண்டு பண்ணினார்கள். இவ்வாறு அங்கங்கே சிற்சிலர் அறிவினராயினரே யன்றி, ஜாதிமுழுவதும் படிப்புள்ளவர்களாய் விருத்திபெற வேண்டுமென்ற தாற்பரியம் உதித்ததே கிடையாது. நம்முடைய வழக்கப்படி, ஸ்திரீகளும் சூத்திரர்களும் வைதிகவித்தைக்குப் பாத்தியஸ்தர்களல்லர். இந்தப்புராதன தாற்பரியத்தினாலே கீழ்ஜாதியார்படிப்பற்றவர்களாயிருந்ததும், அவர்களுக்குப் படிப்பு தகாததென்று கருதப்பட்டதும் விளங்குகிறது. நமது பூர்விக ராஜாக்கள் வெகு தர்மசீலர்களாயிருந்தும், கோவில், பசு, பார்ப்பினர் இவர்களுக்குப் பலவித நன்மைகள் செய்துவந்தும், சாதாரண ஜனசமூகமுழுவதுக்கும் வித்தை கிடைப்பிக்க முயன்றவர்களேயல்ல. அங்கங்கேகிராமங்களில்பள்ளிக்கூடங்களிருந்ததுண்டு. ஆயினும் இவைகளில் கிடைக்கக்கூடிய அறிவு அற்பமானதாயிருந்ததன்றி, இகபரசாதகத்துக்குத் தக்கதாயு மிருந்ததில்லை. துரைத்தனத்தாரும் இப்பேர்ப்பட்ட பள்ளிக்கூடங்களை ஆதரித்ததுமில்லை. இவ்வாறு ஜனங்கள் மடமையில் அழுந்தியிருந்தபடியால், நமதுதேசம் நாகரீக விர்த்திக்கு அநுகூலமான ஸ்திதிக்கு வந்ததில்லை.

இந்தியாதேசம் ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் என்ன ஸ்திதியில் இருந்ததோ இப்போதும் அதே ஸ்திதியி லிருக்கின்றது. அங்கிலேய துரைத்தனம் நிலைத்த பிறகு கொஞ்சம் மாறுதல்கள் உண்டாய் வருகின்றன; அதற்கு முன்னால் நமது தேசம் யாதொரு திருத்தமுமின்றி நாளுக்குநாள் ஹீன ஸ்திதியையே அடைந்து வந்ததென்று சொல்லலாம். ஐரோப்பியர்களைப்போல் நாமும் பலதேசங்களைக் கட்டியாண்டும், பல தேசங்களோடு வியாபாரம் செய்தும், கைத்தொழில், துரைத்தனச்சீர், ஐக்கியம் இவைகளால் கீர்த்திபெற்றிருக்கலாமே! ஏன் இல்லை? தேசத்தில் படிப்பு விர்த்தியாகாமல், ஜனங்கள் மடமையால் மூடப்பெற்று, மூடபக்தியும் வீண்பயமும் உண்டானவர்களாய், வரவர ஹீனஸ்திதியையே பின்தொடர்ந்தார்கள். ஆகையால் நாகரீக அபிவிர்த்திக்கு வித்தை முக்கியகாரணம்.

இதை யறிந்துதான் ஐரோப்பிய ராஜதந்திரிகள் வித்தையின்பொருட்டு வெகு திரவியச் செலவுசெய்துவருகிறார்கள். ஐரோப்பியதேசங்கள் ஒவ்வொன்றிலும், அமெரிக்கா தேசங்களி

லும், பிரதிமனிதனும் படித்தே தீரவேண்டுமென்று சட்டஞ் செய்திருக்கிறார்கள். ஏழையானாலும் செல்வவானானாலும் ஒவ்வொருவனுடைய பிள்ளையும் இன்ன வயதுமுதல் இன்ன வயது வரையில் பொதுப் பள்ளிக்கூடத்தில் படிக்கவே வேண்டும், படிப்பிக்கா விட்டால் பெற்றவருக்கு அபராதம் என்ற சட்டத்தை நிருபித் திருக்கிறார்கள். ஆனால் மிகவும் ஏழையா யிருக்கிறவரும் தினவருமானமே யில்லாதிருக்கின்றவரும், பிள்ளையைப் படிப்பிக்க வேண்டிய செலவு முதலான பளுவை யெப்படிப் பொறுப்பார் என்னில், அப்பேர்ப்பட்டவர்களுக்கு ஐரோப்பியதுரைத்தனத்தார்கள் சகாயம் செய்திருக்கிறார்கள். சம்பளம் வாங்குகிறதில்லை,புஸ்தகம் முதலானதும் வாங்கிக் கொடுப்பார்கள். சிலதேசங்களில் படிக்கிற பிள்ளைகளுக்கு உணவு முதலான செலவையும் தகப்பனுக்கு வைக்கிறதில்லை. படிக்குங் கால அளவில் பிள்ளைக்கு சேரிடும் சகல செலவையும் தகப்பனிடத்திலிருந்து கவர்ன்மெண்டார் அல்லது ஸ்தலஸ்தாபனங்கள் வகித்து வருகிறார்கள். இப்படிப் படிப்பதற்கு ஆகும் செலவு பொது ஐவேஜியிலிருந்து கிடைக்க வேண்டுமென்பது விசிதமாகிறது. படிக்கும் பிள்ளைக்கு சேரிடும் செலவைத் தகப்பன் கொடாவிட்டால், குடிகளிடம் வசூல் செய்யும் வரிப் பணத்திலிருந்துதானே கொடுக்கப்பட வேண்டும். அதாவது, நமது ஊர்ப்பறையருக்காவது தொழிலாளிகட்காவது வித்தியாலாபம் கிடைக்கவேண்டுமானல், மற்ற ஜனங்கள் அந்தச் செலவை வகிக்கிறதாக ஆகிறது.

இது நியாயமா? இது அவசியமா? என்பதில் அபிப்பிராய பேதமுண்டு. ஆயினும் பெரும்பான்மையோர் நியாயமென்றும் அவசியமென்றுமே தீர்மானித்து அனுஷ்டித்து வருகிறார்கள். ஏனென்றால், ஐரோப்பியர் அபிப்பிராயப்பிரகாரம், ஏழைகள் ஏழைகளா யிருக்கிறது ஏழைகளது குற்றமல்ல.செல்வவானுக்கு செல்வமுண்டாவது அவனுக்காகஉழைக்கும் ஏழையினாலேயல்லாமல் அவனாலேஉண்டாகவில்லை. சகலஐசுவரியத்துக்கும் கிருஷியே காரணம். கிருஷிக்கு ஆதாரம் உழைப்பு; இந்தஉழைப்பு உழைக்கிறவன் வேலைக்காரன், பண்ணையாளே யல்லாமல், எஜமானென்று சொல்லப்படுகிறவனல்ல. ஆனால் பணச்செலவில்லாமல் உழைப்புமாத்திரம் பிரயோஜனப் படாது. பூமியும் பணமும் வேண்டும். ஆகையால் கிருஷியினாலுண்டாகும் பலனை பூமிக்குடையவன்,பணம் போட்டவன், உழைப்பவன் இம்மூவரும் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். பங்கிடுவதில், அவரவருக்குண்டாகும் சிரமத்துக்கும் நஷ்டத்துக்கும் தக்கபடி பார்த்தால், உழைப்பவனுக்கே அதிகப்பங்குகிடைக்கவேண்டும்.இப்படிகிடைக்காமல், உழைப்பவனை ஏமாற்றி, அவனுக்கு ஜீவனத்துக்கு மாத்திரம் போதுமானதைக் கொடுத்துக்கொண்டு வருவது வழக்கமாயிருக்கிறது. இந்த வழக்கம் உழைப்பவனுக்கு அதிக அநீதி செய்வது. இந்த அநீதியை ஒருவாறு நிவிர்த்தி செய்யும்பொருட்டு,துரைத்தனத்தார் அநீதியால் லாபம்பெறும் தனவான்களிடம் வரியாகப் பணம் வசூல்செய்து,கீழ் வகுப்பினனுக்குச் சகாயம்செய்து வருகிறார்கள். ஆகையால் மேற்குறித்தபடி படிப்பு விஷயமாய்ச் சட்ட மேற்பட்டிருப்பது கிரமமே யொழிய அக்கிரமமல்ல.

மேலும் தேசத்தில் மடமை மேலிட்டிருப்பதினாலேயே,துன்மார்க்கம்மேலிட்டிருக்கிறது. களவு,குடி, பொய்,வழக்கு,அழுக்காறு முதலானஇழிகுணங்கள் மடைமையாலேயே வழங்கி வருகின்றன. இந்தக் குற்றங்களைச் செய்யும் ஏழைகள் சொற்பவித்தைபெற்றவர்களாய் ஏதேனும் ஒருதொழிலைப் பின்தொடர்வார்களானால், இவைகள்மிகவும் குறைவு பட்டுவரும். களவு, குடிமுதலான துன்மார்க்கங்கள் குறைந்திருக்குமானல் தேசத்திலுள்ளஎல்லாருக்குமே க்ஷேமமுண்டாகுமானதால்,எல்லாரும் அந்தக்ஷேமத்துக்குக் காரணமாயிருக்கிற வித்தியாபிவிர்த்திக்கு ஆகும் செலவைக் கொடுக்கலாம்; கொடுக்கா விட்டால், எல்லாநன்மைக்கும் பொதுவாகப் பாத்தியப்பட்டிருக்கும் துரைத்தனத்தார் கட்டாயம்பண்ணிப் பணம் வசூல்செய்து மேற்படி அபிவிர்த்தியைச் செய்து வரலாம். இவ்வாறு குறிக்கப்பட்ட நியாயத்தினாலேயே ஐரோப்பிய தேசங்களில், குடிகள் வரிப்பணத்திலிருந்து செலவிட்டு,ஏழைகளுக்கும் வலிக்

கட்டாயமாய்ச் செலவின்றி வித்தை ஊட்டிவருகிறார்கள்.

இங்கிலாந்து தேசத்துச் சட்டங்களின் பிரகாரம், எந்தத் தகப்பனுடைய பிள்ளை ஐந்தாவது வயதுக்கும் பதின்மூன்றாவது வயதுக்கும் மத்தியில் குறிப்பிட்ட பரீட்சையொன்றில் தேறாமலும் ஸ்கூலில் கிரமமாகப் படிக்காமலு மிருக்கிறானோ, அந்தத் தகப்பன் ஐந்து ஷில்லிங்குக்கு* மேற்படாமல் அபராதத்துக்கு உள்ளாவான். பிள்ளையின் பதின்மூன்றாவது வயதுக்கும் பதினாலாவது வயதுக்கும் மத்தியில் குறிப்பிட்ட பரீட்சையில் தேறாமலும் பள்ளியில் வாசிக்காமலுமிருப்பானானால அந்தப் பிள்ளையினுடையதகப்பனும் மேற்குறித்த அபராதத்துக்கு உள்ளாவான். எந்தத் தகப்பன் குடியனாயும் துன்மார்க்கனாயும் இருந்து பிள்ளையினுடைய வித்தையை முற்றிலும் அசட்டை செய்து விடுகிறானோ அந்தப் பிள்ளையைக் கட்டாயப்படுத்திக்கைத்தொழில்போதிக்கும் பாடசாலையில் சேர்த்துவிடலாம். தகப்பனுக்கு அடங்காமல் திரிகிறபிள்ளைகளை அப்பேர்ப்பட்ட பிள்ளைகளுக்கென்றுபிரத்தியேகமாய் ஏற்பட்டிருக்கும்பள்ளிக்கூடத்தில்கட்டாயப்படுத்திச்சேர்த்துவிடலாம். திருட்டு, களவுமுதலானதொழிலில் அமர்ந்திருக்கும் தகப்பனுடையபிள்ளை பதினாலுவயதுக் குட்பட்டிருப்பானானால் அல்லது அவனே துன்மார்க்கத் தொழிலில் பிரவேசித்திருப்பானானால் அப்பேர்ப்பட்ட பிள்ளையையும் ஒரு கைத்தொழில் பாடசாலையில் சேர்த்துவிடலாம். பதின்மூன்று வயதுக்குக் குறைந்தாவது, அல்லது பதினாலுவயதுக்குக் குறைந்து பரீட்சை தேறாமலாவது, இருக்கும் பையனை எந்த முதலாளி தன் கைத்தொழிற்சாலையில் வேலைக்காகச் சேர்த்துக் கொள்ளுகிறானோ அந்த முதலாளி இரண்டு பவுன் முதல் ஐந்து பவுன் வரையில், சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி, அபராதத்துக்கு உள்ளாவான். இம்மாதிரி கட்டாயத்தின்மேல் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்படும் பிள்ளைகள் வித்தையோடுகூட உணவையும் பெறுகிறார்கள்; தொழிலொன்றும் கற்பிக்கப்படுகிறார்கள். பள்ளிக்கூடத்துக்குச் சரியாக வரத் தவறிப்போனால் பிள்ளைக்குத் தண்டனையுண்டு; பிள்ளையை பெற்றோர் வராமல் தடுப்பார்களானால் பெற்றோர்க்கும் அபராதமுண்டு. கொஞ்சநாள் முன்னால் பிரதமவித்தை போதிக்கும் கீழ்தரபாடசாலைகளில்சம்பளமேவாங்குகிறதில்லையென்று ஒருசட்டமும் செய்யப்பட்டது. இப்படி வித்தைக்குவேண்டியசாதகங்கள்பலவாறாகஏற்பட்டிருப்பினும்,இங்கிலாந்துதேசத்துப் பெரும்பட்டணங்களில்,தெருத்தெருவாய்சிறுவாலிபர்கள் சமாசாரப் பத்திரிகைகள் நெருப்புப் பெட்டி முதலான வஸ்துக்களைவிற்றுப் பிழைத்துப் படிப்பில்லாமலே காலந்தள்ளி வருகிறார்கள். அநேகம் பிள்ளைகளை, கேவலம் சிறுபிராயத்தில், திருடவும், இரக்கவும் தெருக்களில் பெற்றோர் அனுப்பி விடுகிறார்கள். இப்படிச் செய்பவர்கள் முக்கியமாய்த் திருடர்களும் துன்மார்க்கர்களுமாவார்கள். தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதைவிட இப்படித் தெருக்களில் துரத்துவது தங்களுக்கு லாபமாயிருப்பதால், பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப இஷ்டப்படுவதில்லை. இந்தப்பிள்ளைகளுடைய கதி என்னாகும் என்பதைக் கவனிப்பதுமில்லை.

பிரான்சு,ஸ்விட்ஜர்லாந்து,இடலி,இந்ததேசங்களில்கீழ்த்தரப்படிப்புப்பயிற்றுவிக்கப் பிள்ளைகளிடம் சம்பளமேவாங்குவதில்லை.ஜர்மனிதேசத்தில்,தகப்பன் சம்பளம்கொடுக்கத்தகுந்த ஸ்திதியிலிருக்கிறானென்று தெரிந்தால்சம்பளம் வாங்கப்படும். ஆகிலும் இப்பேர்ப்பட்ட ஸ்திதியிலில்லையென்றுரூபிப்பது சுலபமானதால்,வெகுபேர் தப்பித்துக்கொண்டுவிடுகிறார்கள்.சம்பளம்வாங்கப்பட்டாலும், வெகுசொற்பந்தான் வாங்கப்படும். அனேகபெரிய பட்டணங்களில்பிரதமவித்தைபயிலச் செலவே யில்லை. ஸ்வீடன், நார்வே இந்த தேசங்களில் பிரதம வித்தையும் மத்தியதர வித்தையும் செலவில்லாமலே கிடைக்கும். எந்தத் தகப்பன் தன் பிள்ளையை பள்ளிக்கு அனுப்புவதால் நஷ்டத்தை அடையும்படியான ஸ்திதியி லிருக்கிறானோ அவன் இந்த நஷ்டத்துக்கு ஈடாக பொதுப்பணமாகிய வரிப்பணத்திலிருந்து உதவி பெறுவதுமுண்டு. பெல்ஜியதேசத்தில் எவன் தான்ஏழையென்று வெளிப்படையாகச் சொல்லுகிறானோ அவனுடைய பிள்ளை செலவில்லாமல் வித்தை பெறக்

* 20ஷில்லிங்கு கொண்டது ஒரு பவுன்.

கூடும். டென்மார்க் என்ற தேசத்தில், பதினாறு வயது வரையில் பள்ளிக்குப் போக வேண்டியது கட்டாயம். அனேகம் ஸ்கூல்களில் சம்பளமே வாங்குவதில்லை. ஆயினும் பெற்றோர்கள் அனேகர் சம்பளம் வாங்கும் பள்ளிக்கூடங்களுக்குத் தங்கள் பிள்ளைகளை அனுப்புவது பெருமையாக நினைக்கிறார்கள். எவ்வளவு ஏழையானாலும் பிள்ளையைப் பட்டினி போடுவானேயன்றி படிப்பில்லாமல் நிறுத்த மாட்டான்.

அமெரிக்காதேசத்தில் எந்தக்கிராமமானாலும், இருபது பிள்ளைகள் சேருகிறதாயிருந்தால் பள்ளிக்கூடம் ஒன்று ஸ்தாபிப்பது கட்டாயம். இன்னும் உயர்ந்த மத்தியதர பள்ளிக்கூடங்களுமுண்டு; அவைகளிலும் சம்பளமே வாங்குகிறதில்லை. சம்பளம் வாங்காதிருப்பதுடன், பிள்ளைகளுக்குப் புஸ்தகங்களும், பலகை, காகிதம் முதலானவைகளும் இனாமாகவே கொடுக்கும்படியான ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறது. அமெரிக்காதேசம் குடியரசு நாடாகையால், பிரதிமனுஷனுக்கும், எளியோனானாலும், தனிகனானாலும், ராஜ்யதந்திரத்தில் பங்குசெலுத்தும் சுதந்தரம் உண்டு. ஆகையால் ராஜ்ய அதிகாரிகள் தேசத்தில் ஒவ்வொருவனுக்கும் வித்தை பயிற்றுவிக்க வேண்டுமென்ற அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள். தேசாபிமானமாகிய பெருங்குணத்தை விர்த்திபண்ணுவது படிப்பினுடைய முக்கியகருத்தென்பது அவர்களுடைய கொள்கை. ஜனங்களுக்குத் துரைத்தனத்தார்செய்யக்கூடிய நன்மைகளில் வித்தையைவிடப் பெருநன்மை யில்லை, அப்பேர்ப்பட்ட நன்மையை ஜனங்களுக்குத் துரைத் தனத்தார் இனாமாக அளிக்கும்போது, துரைத்தனத்தினிடத்தில் ஜனங்களுக்கு அபிமானமுண்டாவது இயல்பு. எல்லாப் பள்ளிக்கூடங்களும் அவ்வவ்விடத்து ஜனசமூகத்தாலேயே மேல்விசாரணை செய்யப்பட்டு நடத்திவரப் படுகின்றன.

இந்தியா தேசமாகிய நமது தேசத்தில் வித்தியாவிர்த்தி செய்வதைவிட அவசியமான முயற்சி வேறொன்றில்லை. தனம், ஒழுக்கம், தைரியம், தேசாபிமானம் முதலிய லட்சணங்கள் நமது தேசத்தாருக்கு வேறு எவ்விதமாயும் உண்டாகக்கூடியதில்லை. ஆகிலும் அங்கிலேயர் ஆதியில் வித்தியாசாலைகள் ஸ்தாபித்தபோது இந்தக் கருத்துக்கொண்டு ஸ்தாபித்ததாகத் தெரியவில்லை. முக்கியமாய் ஸர்க்கார் உத்தியோகத்துக்கு வேண்டிய அங்கிலேய பாஷையின் அறிவை ஹிந்துக்களுக்குப் போதிக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிருந்ததாகத்தெரிகிறது. எண்ணம் எப்படியிருந்தாலும் இதுவரையில் அங்கிலேய துரைத்தனத்தாரின் முயற்சியால் நமக்கு உண்டாயிருக்கும் நன்மைக்கு அளவில்லை. ஆகிலும் இதுவரையில் மேல்தரபடிப்பையே கவனித்து வந்தார்களேயன்றி சாதாரண ஜனங்களுடைய வித்தியாலாபத்தை அதிகமாகக் கோரவில்லை. இப்போதுதான் சில காலமாக கீழ்த்தர வித்தையையும் கவனித்து வருகிறார்கள். லார்ட் ரிப்பன் ராஜப்ரதிநிதியாயிருந்தகாலத்தில், அவர் 'கமிஷன்'* ஒன்றுஏற்படுத்தி, பிரதமவித்தை விர்த்தியாவதற்குவேண்டிய ஆலோசனை சொல்லும்படி கற்பித்தார். கற்பித்தும், முடிவாய்ச்சொன்ன ஆலோசனை ஐரோப்பிய அமெரிக்கா ஏற்பாடுகளுக்கு ஒவ்வினதாகத் தேறவில்லை. கவர்ன்மெண்டார் செய்த தீர்மானமாவது: "ஜனங்களுக்கு வித்தையூட்டும் பொறுப்பை நாம் பூர்ணமாக அங்கீகரிக்கிறோம். அங்கீகரித்தும், எங்கள் பொக்கிஷ ஐவேஜுக்குத் தக்கபடியே நிறைவேற்ற முடியும். இவ்வாறு அரை குறையாக நிறைவேற்றுவதிலும், கவர்ன்மெண்டாரின் முறைமை யென்ன வென்றால், துரைத்தனத்தாரல்லாமல் மற்றவர்கள் செய்யும் முயற்சியோடு போட்டிபோடாமல், முதலில் வழியை மட்டும் காட்டி, ஜனங்கள் தாங்களே வித்தியா ஸ்தாபனங்களை நாட்டி நடத்தச் சக்திபெற்றதும், துரைத்தனத்தார் வித்தியாப்பிரயத்தினத்தினின்றும் விலகி விடுவார்கள். திரவிய சகாயமட்டும் செய்வார்கள். மற்றச்சம்பந்தம் ஒன்றும் வைத்துக்கொள்ள மாட்டார்கள்."

இப்படி இந்தியா கவர்ன்மெண்டார் செய்த தீர்மானத்துக்கும், ஐரோப்பிய அமெரிக்கா தேசங்களில் நாம் மேற்குறித்தவாறு நடந்தேறிவரும் ஏற்பாடுகளுக்கும் வித்தியாசமுண்டு. ஜனங்களுக்கு வித்தைப்பயிற்சி செய்விப்பதில் பணச்செலவைக் கவனிப்பது தகாது. எவ்வ

* ஒரு விஷயத்தைப்பற்றி விசாரித்துத் தெரிவிக்க அதிகாரங் கொடுத்து நியமிக்கப்பட்டவர்களுக்கு இங்கிலீஷில் 'கமிஷன்' என்று சொல்லுறது.

ளவு செலவானாலும் அப்பொறுப்பை துரைத்தனத்தார் வகிப்பது நியாயமும் கடமையுமாமென்பது அவர்கள் கருத்து. இங்கே, வித்தை அபிவிர்த்தியானாலும் ஆகாவிட்டாலும் கவர்ன்மெண்டார் எவ்வளவு திரவியம் இந்த விஷயத்துக்காக மிகுக்கலாமோ, அவ்வளவுக்குத் தான்பிரஜைகள் பாத்தியப்பட்டவர்கள் என்று நினைக்கிறார்கள். இதனால் இத்தேசத்தில் வித்தியாபிவிர்த்தி அதிக மாகவில்லை.

சில ஐரோப்பிய தேசங்களில் எழுத வாசிக்கத் தெரியாதவன் ஒருவனேனும் இல்லவே யில்லை. இங்கிலாந்து தேசத்தில் இப்படித் தெரியாதவன் நூற்றுக்குப் பத்துப் பேர் தான் உண்டு. நமது தேசத்திலேயோ எழுதப்படிக்கத் தெரிந்தவன் நூற்றுக்குப் பத்துப் பேருந்தமே யில்லை. நூறு ஜனங்களில் 90-பேர் கையெழுத்துப் போடத்தெரியாதவரா யிருப்பார்கள். மேலும்,பள்ளிக்கூடங்களில்எவ்வளவு பேர் படித்துவருஷா வருஷம் தயாராகிறார்களோ,அந்தத்தொகையைவிடஜனப்பிறப்புஜாஸ்தியாவதால், எழுதப் படிக்கத்தெரியாத ஜனங்களின் தொகை மொத்த ஜன சங்கியையின் தாமாஷாப்படி ஜாஸ்தியாய் வருகிறது. அதாவது, பத்து வருஷத்துக்கு முன்னால் எழுதப் படிக்கத் தெரியாதவர் 100 - க்கு 90 - ஆனால் இப்போது 100-க்கு 91-ஆகும்.

சம்பளம்வாங்கிப்படிப்பிக்கும்ஸ்திதியே இப்படியிருக்கும்போது, சம்பளம் வாங்காமலே ஏழைகளைப்படிப்பிக்கக் கவர்ன்மெண்டார் எத்தனிப்பார்களென்று நாம் நினைக்கவேவேண்டியதில்லை. நமதுதேசம்சுத்த ஏழைத்தேசமானதால் தர்மப்படிப்பை முற்றிலும் ஸ்தாபிப்பது முடியாது. பிள்ளைகளிடம் சம்பளம்வாங்காமல் இருக்கலாமேஒழிய,போதிக்கும்வாத்தியார்கள்இனாமாகப் போதிக்க மாட்டார்கள். மற்றச் செலவுகளும் உண்டு. இந்தச் செலவுகளுக்கு வேண்டியதொகை வரிவசூல்செய்தே கிடைக்கக்கூடியது. அதாவது, ஜனங்களே கொடுக்க வேண்டும். நமதுதேசத்தில் ஏழைஜனங்கள் கோடிக் கணக்காயுண்டு. இந்தக் கோடிக் கணக்கான ஜனங்களுக்கு இனாமாகக் கல்விபயிற்றுவிக்க வேண்டுமோனால், கோடிக் கணக்கான திரவியச்செலவு செய்யவேண்டும். இவ்வளவு செலவையும் வரியாகக் கொடுக்க நமது தேசத்தாருக்கு சக்தியில்லை யென்பது திண்ணம். ஆகிலும், சில பெரிய பட்டணங்களில் ஆரம்பஞ் செய்து பார்க்கலாம். ஆகிற செலவைக் கவர்ன்மெண்டார் பாதியும் முனிசிபாலிடியார் பாதியுமாக ஒப்புக்கொள்ளலாம். இவ்வாறு தர்மப்படிப்பைத் தவிர, கவர்ன்மெண்டார் வித்தை விஷயமாய் ஜனங்களுக்குச் செய்ய வேண்டியது வேறொன்றுமுண்டு.

ஐரோப்பாவில் ஏழைஜனங்களுக்குக் கைத்தொழில் பயிற்றுவிக்காத தேசமில்லை. நமது தேசத்தில் இந்தப்பயிற்சி எங்குமில்லை. இதுவரையில் நமது தொழிலாளிகள் தங்கள் தங்கள் பெற்றோர் அல்லது மற்றத் தொழிலாளிகள்கூடச் சேர்ந்து வேலை கற்றுக்கொண்டு தேறிவந்தார்கள். இனி இவ்வாறு அடையும் பயிற்சி போதாது. ஐரோப்பியருடைய போட்டி மேலிடுவதால், நமது தேசத்து எல்லாத் தொழிலும் யந்திரங்களால் நடத்த வேண்டி வருகிறது. இப்படிப்புதிதாய் நேரிடும் வேற்றுமைக்கு அனுகுணமாக முன்போல அனுபோகத்திலேயே கிடைக்கும் அறிவு போதாமல், புஸ்தகங்களின் மூலமாயும் தொழிற்சாலைகளில் கற்றுக்கொள்ளுவதினாலும், தேர்ச்சிபெற அவசியம் மிகுந்து வருகின்றது.பழைய கைத்தொழில்கள் அழிந்துபோயின; புதிதாக துணி நெய்தல், காகிதம் செய்தல், நெருப்புக்குச்சி,மெழுகுவர்த்தி, ஸோப் * முதலானவை தயார்செய்தல், இம்மாதிரியான புதுத்தொழில்கள் ஸ்தாபிக்கப்பட்டு வருகின்றன. இவைகள் முன்போல தொழிலாளிகளால் தங்கள் தங்கள் வீட்டில தனியாகச்செய்யப்படாமல், ஏராளமானமுதல் வைத்து, யந்திரசாலைகள் ஸ்தாபித்து, முதலாளிகள், மேல் விசாரணை செய்வோர், தொழிலாளிகள் இவர்கள் ஒரு கூட்டமாய்ச்சேர்ந்துழைத்து பெரும்அளவாய்த் தயாராகவேண்டி யிருக்கின்றன. இந்தப்புதுமைக்குத்தக்க வித்தையை நமது தொழிலாளிகள் புதிதாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். இது கவர்ன்மெண்டார் சகாயமன்றி நிறை வேறத் தக்கதல்ல.

ஜி. சுப்பிரமணிய அய்யர்.

* சவுக்காரம்.

## நகைப்பைத்தியம்.

### ஹிந்துக்களுக்குள் ஆபரணங்கள் நிமித்த முண்டாகும் தீங்குகளும் அவைகளைப்பற்றிய தர்ம்ம சித்தாந்தங்களும்.

உத்தமகுணங்களும் தர்ம்மங்களுந் தழைத்தோங்கி வந்த பரதகண்டமாகிய நமது தேசத்தில் நகையாசைமீறிப் பைத்தியம்போல் மாறி ஸ்திரீகளையும் புருஷர்களையும் ஆட்டத் தொடங்கியிருப்பதாலும் அதன் தோஷங்கள் இப்போதே சொல்லி முடியாதாகையாலும், அது மேன்மேலும் அதிகரிக்காமல் இப்போதே தடுக்கவேண்டியது கட்டாயமென்றுணர்ந்து இப்பிரபந்தம் எழுதலானேன். இதிற்கண்ட அபிப்பிராயத்திற் சேரக் கூடிய ஒவ்வொருவரும் அதை எந்தமட்டில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முடியுமோ அந்தமட்டிற் கொண்டுவரவேண்டுமென்று பிரத்தியேகமாகப் பிரார்த்தித்துக்கொள்கிறேன். ஆற்றுவெள்ளம்போல் இப்போது அணைகடந்து புரண்டழிக்கும் ஆபரணப் பைத்தியத்தின் சக்தியை ஆரம்பத்தில் தடுப்பது கடினமாக இருந்தாலும் அவ்வருத்தத்தை யோசிக்காமல் எறும்பூரக் கல்லுந் தேயுமென்ற பழமொழிப்படி ஒவ்வொருவரும் முயற்சி செய்தால் கருதியவண்ணம் சித்தியாகு மாகையால், நம்மால் என்ன வாகுமென்று மனந்தளராமல் ஒரேதீர்மானச் சித்தமாக முயற்சி செய்து இதிற்கண்ட அபிப்பிராயத்தைக் கொண்டு செலுத்தவேண்டும்.

நகைப்பைத்தியம் பிடித்தது இப்போது பத்திருபது வருஷமாகத்தான். அதற்குமுன் நகையாசை யிருந்தாலும் பைத்தியம்போல் ஆழவில்லை, ஆகையால் சமீபகாலத்தில் முளைத்து வேரூன்றிவரும் தீங்கைக் களைவது ஒரு கடினமான வேலையென்றெண்ணலாகாது. தொன்றுதொட்டு வந்த தோஷமாக இருந்தால் ஒருவேளை மிகுந்த சிரமம் எடுக்கவேண்டிவரும். அவ்வாறில்லாமையால் அதை நிவர்த்திக்கவெண்ணும் ஒவ்வொருஉத்தமபுருஷனுக்கும்மனம் ஊக்கமடைவதற்குக் காரணமா யிருக்கிறதேயன்றி தளர்வதற்குக் காரணமில்லை.

### I. நகையுற்பத்தி.

முற்காலத்தில் அநாகரீகமான காட்டுஜனங்கள் அஞ்ஞானம் நிறைந்து மிருகப்பிராயமாய் விலங்குகள்கொன்று சுட்டுஞ்சுடாமலுந் தின்று சஞ்சரித்து வருங்காலத்தில், அலங்காரஞ் செய்துகொள்ளும்பொருட்டு பற்பல எலும்புகளாலும் மரக்கட்டைகளாலும் கற்கரடுகளாலும் தாழ்ந்த உலோகங்களாலும் ஆபரணங்கள் நிர்மித்து அணிந்துகொண்டார்கள். பிற்காலத்தில் நாகரீகம் பெருகப்பெருக, அறிவு கூடக்கூட, ஆபரணங்கள்குறைந்து சீரானஸ்திதியையடைந்து அங்கிலேயர்முதலிய அன்னியதேசத்தவர்கள் சர்வ க்ஷேமங்களையும் மேம்பாடுகளையும் பெற்றிருக்கிறார்கள். அநாகரீகங்கூடி அறிவு குறைந்திருக்கும் நிலைமைக்குரித்தானது நகையென்றும் அநாகரீகங்குறைந்து அறிவு கூடியிருக்கும் நிலைமைக்குரித்தானது நகையின்மையென்றும் ஏற்படுகிறது. இந்த சித்தாந்தத்தைப் பலவகைப் பிரமாணங்களால் பிற்பாடு தெளிவாகவும் விஸ்தாரமாகவும் காண்பிக்கலாம்.

தற்காலத்தில் அலங்காரத்திற்கு மாத்திரமல்லாமல் மற்றநேக காரணங்கள் நிமித்தமாகவும் நகையை உபயோகப்படுத்தியும் பெருக்கியும் வருகிறார்கள்:—

(க) வரவெல்லாஞ் செலவாகாமல் செட்டாய்க் காரியநடக்கும்பொருட்டு ஆபரணசையை வளர்த்தல்,
(உ) செட்டாய்ச்செலவுசெய்து மிகுதிவருகிற தொகை கைவிட்டுப் போகாமல் முதல் சேர்த்தல்,
(ங) அன்பில்லாப் பெண்டீரை யன்பின்வழி செலுத்தி வசப்படுத்தல்,
(ச) மனைவியின்மேல் புருஷனுக்குள்ள அன்பை திருஷ்டாந்தப்படுத்திக் காட்டல்,
(ரு) அந்தஸ்தைக் காப்பாற்றல்,
(சூ) பெருமை சம்பாதித்தல்,
(எ) வழி யாத்திரையில் திடீரென்று நேரிடுஞ் செலவுக்கு வழிதேடல்,
(அ) உலகவழக்கம் அனுசரித்தல்,
(கூ) வேதவாக்கியங் காப்பாற்றல்,
(ய) கடன்காரரை மோசப்படுத்தல்,
(யக) தட்டார்களுக்குப்பிழைப்புக்கொடுத்தல்,

(௰உ) உலகவாழ்க்கை அநித்யமென்றும் கண்டது காக்ஷியென்றும் ஓர் கொள்கை யனுசரித்தல்,

(௰௩) காது மூக்குகளி லுள்ள துவாரங்கள் அடைபட வேண்டுமென்றல்,

(௰௪) நாகரீகப்பெற்ற அந்நிய இராச்சியத்தவர்க்குள்ளும் நகை நடமாட்டமுண்டென்று உதாரணங்காட்டல்,

(௰௫) நகைப்பெருக்கம் நாகரீக அங்கமாக நினைத்தல்,

(௰௬) தேகத்தில் சுவர்ணம் இருந்தால் சுத்தமென்று மொழிதல்,

(௰௭) ஒரு குன்றுமணிப் பொன்னணிய ஒரு கோடிப் புண்ணியஞ் செய்திருக்க வேண்டுமென்று நினைத்தல்,

(௰௮) தேகத்திற் பொன்னில்லாமல் ஸ்திரீகளைப் பார்க்கக்கூடாதென்று கூறல்,

(௰௯) நாளுக்குநாள் நகை பெருகிக்கொண்டிருப்பதால் அது எவ்வளவோ கெடுதலென்று பட்டாலும், அதை நிறுத்தமுடியாதென்று அனுசரித்தல்,

(௨௰) சம்பாத்திய சக்தியில்லாத ஸ்திரீகட்குக் கையிருப்பாக ஏதாவது செய்யவேண்டுமென்று சமாதானங் கூறல்,

(௨௧) நகையில்லாவிட்டால் நல்ல வரன் கிடையாதென்றும், கிடைத்தாலும் மாமி முதலோர்கள் அன்பாய் நடத்தமாட்டார்களென்றும் எண்ணுதல்,

(௨௨) பெண் இராச்சியமாகையால் பெண்களிஷ்டப்படி நடக்கவேண்டுமென்று நினைத்தல்,

(௨௩) நகை யணிவதால் இராச்சியத்திற்குத் தோஷமென்னவென்று தர்க்கித்தல்,

(௨௪) ஆலயங்களில் சுவாமிக்கும் அம்மனுக்கும் இட்டிருக்கும் ஆபரணங்களைக் காண்பித்துச் சகல ஆசாபாசங்களுங் கடந்த தெய்வசொரூபத்திற்கே ஆபரணம்வேண்டுமானல் கேவலம் ஆசாபாசங்களி லாழ்ந்திக் கிடக்கும் மானுடஜென்மத்திற்கு ஏன் கூடாதென்று வழக்காடுதல்,

(௨௫) அலங்காரக் கைத்தொழில் பேணவிட்டால் மாண்டுவிடுமாகையால், ஆபரணக் கைத்தொழில் மாளாதிருக்கும் பொருட்டுப் பேணுதலென்றல்,

(௨௬) மரம்வைத்தவன் தண்ணீர் வார்ப்பானாகையால் நகையினல் மனிதர் கஷ்டப்பட ஈசுவரன் செய்யப்போகிறானவென்று நினைத்தல்,

(௨௭) ஈசுவரசிருஷ்டியிற் காணப்பட்ட பொன், வெள்ளி முதலிய உலோகங்கட்கும் நவரத்னங்கட்கும் என்ன உபயோகமென்றும் மடக்கிக் கேட்குதல்,

(௨௮) கையாலாகாதவன்றான் நகை யென்னத்திற்கென்று ஆக்ஷேபிப்பானென்று இகழ்தல்,

(௨௯) மிகுதி வைக்கும் பொருளை கடன்காரரிடம்கொடுத்தால் மோசம்போமாகையால் நகையிற் சற்று நஷ்டம் வந்தாலும் அதிற் போட்டுத் தேகத்தி லணிந்துகொண்டால் முழுமையும் மோசம்போகாம லிருக்குமென்று நகையில் முதலிட்டுக் காப்பாற்றலென்றல்.

மேற்கூறியகாரணங்கள்தான் பிரதானமாக ஆபரணம் உபயோகிப்பதற்கும் பெருக்குவதற்கும் ஆதாரமாக ஜனங்கள் சொல்லிவருகிறார்கள். இந்த விஷயத்தைப்பற்றி நகையாவலுள்ள ஜனங்களுடன் வாயாடினல் இன்னும்சிலகாரணங்கள் வெளிப்படலாம்.

மேற்கூறிய காரணங்கள் ஏன் கைக்கொள்ளக்கூடா? மேற்கண்ட காரணங்கள் தர்மசாஸ்திரங்கட்கும் சர்வஜனங்களின் பொதுநன்மையைப்பற்றிய லௌகீக தர்ம்மங்கட்கும் விரோதமாக விருந்தாலும், சரீரசுகத்திற்கும் ஆத்மரக்ஷைக்கும் விரோதமா யிருந்தாலும் அவைகளைத் தள்ளிவிடவேண்டும். சத்தியம் சமாதானத்துக்கும், அபிவிர்த்திக்கும், பொதுக்காரணமாயுள்ளது. நகைப் பெருக்கத்தாலும், நகையாசையாலும், சத்தியம் குன்றி அசத்தியம் மேவிடுமாகில், நகையாசையைத் தொலைக்கவேண்டும். அதுபோலவே இரக்கம், தயை, உதவி, காருண்யம், பந்து அபிமானம், முதலியஉத்தமகுணங்கள் குன்றினல் அப்போதும்நகையாசையை விடுக்கவேண்டும். சண்டை, சச்சரவு, மனஸ்தாபம், கடுமொழி, வஞ்சனை, வெளியில் அலைந்துவரும் புருஷ

னுக்கு அன்பாதரவில்லாமல் முகம் சுண்டி, மனம் குன்றி, இணக்கமின்றி உபேக்ஷைகாட்டும் தன்மை, முதலிய துற்குணங்கள் நகைப் பேராசையால் வருமாகில் உடனே நகையாசையை வேரோடறுக்கவேண்டும். ஆபரண இச்சையால், கொலை, களவு, காமம், கட்குடி, முதலிய மகாபாதகங்கள் நேரிடுமாகில் அதை ஒருநிமிஷங்கூட வைக்காமல் களையவேண்டும். குரோதம், லோபம், மதம், மாச்சரியம் முதலிய துர்க்குணங்கட்கும் ஆதாரமாக விருக்குமாகில் அப்போதும் கூடாதென்று விலக்க வேண்டும்.

நகையால் உசிதமில்லாத கலியாணம் நேரிட்டு அதனால் வியாதியும் பலஹீனமும் அங்கஹீனமும் பொருந்திய சந்ததிகள் உண்டாவதற்குக் காரணம் ஏற்பட்டால் நகையாவ வில்லாமற் செய்யவேண்டும். ஆபரணப் பைத்தியத்தால் வைதவ்வியம், விபசாரம், மானுவமானமில்லாத்துணிவு, நாணக்குறைவு, சாகாசம் முதலிய தீமைகள் நேரிட்டால் அவைகள் விலகும் பொருட்டு அதை உடனே கைவிட வேண்டும்.

போக்கிய பதார்த்தங்கள் விளைவிக்கக்கூடியதும் அடைவிக்கக் கூடியதுமான, ஜீவித முதல்கள் * சேத்தமுதலாக மாறுவதற்குச் சார்பு வரும் பக்ஷத்தில் அப்போதும் நகையின்மேல் இச்சை யொழிக்க வேண்டும். ஆத்மவஞ்சனைக்கும் பரஹிம்சையில் அலக்ஷியத்திற்கும் காரணபூதமா யிருக்குமாகில் அவை நிமித்தமாகவும் நகைப் பேராவலை யொழிக்க வேண்டும். ஐக்கியபத்திய மின்றிச் சுவய காரிய புத்தி மேலிட்டு மேனேக்கிழுந்து பொறாமை, கோள் முதலிய துற்குணங்கள் ஜனிக்குமாகில், அப்போதும் ஆபரணப் பைத்தியத்தைத் தள்ள வேண்டும். நகை யாசையால் சாஸ்திரம் மேம்பாடடையாமல் தடைப்பட்டு நாளுக்கு நாள் குன்றிப்போவதற்கு இடம்வந்தால் அவ்வாசை கெடுதலென்று நீக்கவேண்டும். நகைப்பித்தால் தெய்வபக்தி குறையுமாகில் அது உதவாதென்று ஒழிக்கவேண்டும். நகையில் அழுந்திக்கிடக்கும் முதலெல்லாம் ஜீவித முதலாக்குவதால் பஞ்சம் முதலிய வறுமை நோய்கள் நீங்குமாகில் அப்பெரிய லாபத்தை உத்தேசித்து அலங்காரம் பெரிதென்றெண்ணுமல் வறுமைநோய் நீங்கும் வழி தேடவேண்டும்.

எஸ். இராமசுவாமி அய்யர்.

* பலவகை முயற்சியில் செலுத்தப்பட்டு க்ஷயமடையாமலிருக்கக் கூடியதும் உபரியாக லாபம் கொடுக்கக் கூடியதுமான முதலுக்கு 'ஜீவிதமுதல்' என்று பெயர். அவ்வாறு லாபம் கொடுக்கக்கூடிய முயற்சியில் செலுத்தப் படாமல் நாளுக்கு நாள் க்ஷயம் வரக்கூடிய முதலுக்கு 'செத்தமுதல்'என்று பெயர்.

---

## தமிழ் மொழி வளர்த்தல். *

அல்லது

### தமிழ் பாஷையை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்கள்.

கனவான்களே!

இன்று நான், உங்கள் அனுமதிப்படி, மேற்கூறிய விஷயத்தைத்தொட்டு நினைந்ததை உபந்நியாசம் செய்யுமுன் இம்மாதிரிச்சங்கம், இப்படிப்பட்ட விடத்தில், இப்படிப்பட்ட காலத்தில், கூடிய பெருமகிழ்ச்சியைக் குறித்துச் சிறிது வெளியிடுவேன். இத்தகைய சபையொன்று இதற்கு முன்னமே கூட வேண்டுமென்ற எண்ணம் இந்தச்சபையிலுள்ளவர்களிற்பெரும்பான்மை யோருடைய ஞானத்தில் உதயமாயிருந்தது மன்றி, அதற்கு வேண்டிய பெருமுயற்சிகளும் அவர்முன் செய்யாதொழிந்திலர். ஆகிலும், ஏதேது காரணங்களாலோ, அது அப்போது பிரத்தியக்ஷத்தில் கை கூடினதாக வில்லை. அது இப்போதுதான் தெய்வவருள் பிறந்து, சபையோருடைய நற்காலமேலீட்டினுலும், அவர்களுடைய தவப்பேறும் முயற்சி வலிமையும் ஒன்று சேர்ந்ததனுலும், காரியமாய் நிறைவேறக்கண்டோம். ஏற்கனவே, இந்த மலையாள நாட்டில், தமிழ்மொழியின் அருமை பெருமைகளை அறியத்தக்கவரேனும், அறிந்தவரேனும், அகப்பட்டுக்கொள்வது அரிது. அகப்பட்டாலும், அப்படித் தமிழில் அபிமானமும் விற்பத்தியுமுடையோர் ஒருங்கு சேர்ந்து, ஒரேயிடத்தில் வந்து, ஒரே பொது

* இது திருவனந்தபுரம் தமிழ் பயில்சங்கத்துமுன் ஓர் உபந்நியாசமாக இயற்றி வாசிக்கப்பட்டது.

நோக்கத்தோடு, பாடுபட்டுழைக்கக் காண்பது அரிதிலுமரிதே. அது அப்படியிருக்கையால், இப்பொழுது இந்த ஒரே கூரையின்கீழ் இந்த சபை நிறைந்து சபா ரத்னங்களாய் வீற்றிருக்கும் கனவான்களை இந்த மகத்தான காரியத்திற்குத் தலைகொடுத்துழைக்க, அன்போடு கூடியிருக்கக் காணப்பெற்ற காட்சி இந்த ஊர் செய்த தவமோ, மற்று யார் செய்த தவமோ அறிகிலேன். பசுமரங்கள் தழைத்து, நீர்வளம் நிலவளம் பொருந்திய இவ்விராஜ்ஜியத்தில் இத்தனை கண் குளிரும்படியான காட்சி அரிதே. தேனைவடித்துச் சொரிந்தாலும், அதைக் கனிவர்க்கங்களோடு பிசைந்து உண்டாலும், அது இஷ்டர்கள் ஒன்றுசேர்ந்து பொதுநல விஷயமாக முன்னிட்டுப்பேசும் இன்பக்கிளர்ச்சிக்கு ஒருபோதும் ஒப்பாகாது. எத்தனை அன்னசத்திரம் கட்டினும், எத்தனை லக்ஷம் பேருக்குப் போஜனம் அளிப்பினும், இந்தப்புண்யத்திற்கு ஈடு ஒன்றுமில்லை. ஏனெனில், அன்னம் அன்று பசிகேட்கும்; கல்வி, நின்று, ஆத்ம பசியைக்கேட்கும். என்றும்அழிவில்லாத செல்வம் கல்விச்செல்வமே. என்றும் கெடாத விளக்கு கல்விவிளக்கே. கல்வியிலும், சுயபாஷையில் கல்வியை வளர்க்குதல் யாவருக்கும் இனிதே. இப்படிப்பட்ட காரியத்திற்காகவாம் இங்கு நாம் இந்தச்சபையாகச் சமைந்தது. இது ஒரு கேவல சங்கதியன்று. ஆழ, அகல, அமர்ந்து யோசித்தால், இது போன்ற கூட்டத்தின் பிரயோஜனங்கள் நினைக்க நினைக்க வளரும். ஊக்கம், ஒற்றுமை, விடாமுயற்சி, பொது நன்மை நோக்கம், சுதேசாபிமானம் இத்தனையும் சேர்ந்தால் முடியாதபொருள் இவ்வுலகத்திலுண்டோ? இல்லை. பொதுநன்மையிற்சிறந்த தர்மமும் பேறும் உலகத்திலுண்டோ? இல்லை. உலகத்தில், கல்வியின்றிப் பொதுநன்மைநாடுவது சாத்தியமோ? இல்லை. கல்வியில், சுயபாஷையில் கல்விகற்கும் பெருமை மற்றெதிலுமுண்டோ? இல்லை. ஆகையால், நேசர்களே, நாம் எடுத்திருக்கும் காரியம் இவ்வளவு மகத்துவமுடையது. அதிற் செய்யவேண்டிய நடபடிகள் கடல்போல்விரிவுடையன. கடலும் பல துளியாகையால், இந்தச்சபைபோன்ற அனேக சபைகள் இத்தேன்னாடு எங்கும் தழைக்கப்பெற்றால், நாம் எண்ணமிடுங் காரியமெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி யாகும். அனேகம் காரியங்களை முன்னிட்டு அனேகம் சபைகள் கூடுகின்றார்கள். அவைகளில், சில தழைக்கின்றன, சில இருந்தவிடந் தெரியாமல் அதோகதியாய்ப்போகின்றன. சபையோர் மனமும் செய்கையும் காலத்தோடு ஒத்துக்கூடினால், சபை ஆழவேரூன்றி, அகலக்கிளைவிட்டு, ஓங்கியுயர்ந்து உல்லாசமாய் வளரும். அன்னவர் மனமிரண்டுபட்டு, வருத்தமான வேலைநேர்ந்து வரும் போது, 'சட்டி சுட்டது, கை விட்டது' என்று சலித்தால், முயற்சி குன்றி, வலியற்று, சபை அடியோடே சாயும். ஆகையால், கனநேசர்களே, தெய்வ கிருபையாலும், நாம் செய்த தவத்தினாலும் இங்கு சேர்ந்த இத்திருவனந்தைத் தமிழ் பயில் சங்கமாகிய பசுஞ்செடியை, நாம் ஒவ்வொருவரும் தண்ணிய நீராகிய மன ஒற்றுமையால், எந்நேரமும் ஆதரித்து, மேன்மேலும் தழைத்து வளரச்செய்து, கேட்போர்க்கு இன்பம் பழுத்து, கூடியிருப்போருக்கு அறிவென்னும் குளிர்நிழலைக் கொடுக்கும்படி செய்ய முயலுவீர்களென்று, அனந்தந்தரம் பிரார்த்தித்துக் கொண்டு, இன்று நான் மேற்கொண்ட விஷயத்தைக்குறித்து என் சிற்றறிவில் தோன்றிய சில மெய்ம்மொழிகளை இந்தச் சபைக்குக் காணிக்கை யாக்குகிறேன். அதைப் பொறுமையுடன் கேட்பீர்களாக:—

தமிழ் மொழியை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்களை எடுத்துக் கூறுமுன், அப்படிச் செய்வது இக்காலத்தில் அவசியமோ, இல்லையோ என்ற சந்தேகம் இங்கொருவருக்கும் தோன்றவில்லையாயினும், பிரசங்கமுறையில் அதைப் பற்றி விவகரிப்பது பொருந்தாத ஒன்றன்று. ஆகவே, அதைப்பற்றிக் கவனிக்கும்போது, ஆதியில், தமிழென்னும் இனிய மொழி இத்தென்னிந்தயாவிலுள்ள எல்லோரும் வீட்டிலும், நாட்டிலும் அநாதிகாலமாய் வழங்கிவந்ததும், இப்போது வழங்கி வருவதுமான நம் தாய் பாஷையென்பது சொல்லாமலே விளங்கும். ஸம்ஸ்கிருதம் முதலியபாஷைகள் பூர்வகாலத்தில், விசேஷமாய் வடஇந்தியாவிலும் சிறுபான்மை தென்னிந்தியாவிலும் சிறந்து வழங்கி வந்திருந்தும், அது எத்தனையோ காலத்திற்கு

முன் யாது காரணத்தாலோ பேசும்பாஷையா யிருந்த வாழ்வு அகன்றது. அது எவ்வளவோ பெருமையுடையதாயிருந்தும், அது இப்போது அம்மொழியிற் கல்விபயின்ற பண்டிதர்களிடம் மட்டுமே சிறுபான்மை வழக்கத்திலிருப்பதே தவிர, வீட்டிலும் வெளியிடத்தும் உலாவி நிலைபெறும் தன்மையதாயில்லை. இது மிகவும் விசனிக்கத் தக்கதே. இத்தென்மொழியோ, அப்படிக்கின்றி, முற்காலத்தைப் போல், இப்பொழுதும் ஜனங்களுக்குத் தாய் பாஷைபாகவே இருக்கின்றது. ஒரு பெரியவர் சொல்லியது போல் "நம்மைப்பெற்றதும் தமிழ், வளர்த்ததும் தமிழ், நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ்." எத்தனைதான் அங்கிலேயம் முதலிய அன்னிய பாஷைகளைப் படித்தாலும், வீட்டில்வந்தால், நமக்குத் தமிழன்றி வேறொன்றுக்கும் இடமில்லை. மறுபாஷை கற்பது, கடலைக்காணப்போவதுபோல், பார்ப்பதற்கேயன்றி அநுபவிப்பதற்கல்ல. கடல்வெள்ளம் பார்க்க எத்தனை அழகாயிருந்தாலும், அதன் உப்பு அதை விட்டு ஒருபோதும் போகாது. எப்போதும் கடற்கரையிலிருக்கலாமென்றாலோ, அதுவும் முடியாது. நாம் உண்டு, உடுத்து, உறங்கி, உற்சாகம் கொள்ள வேண்டுமானால் வீட்டுக்கு வரவேண்டும். நாடுசுற்றியும், "திரைகடலோடியும்," தேடிய பொருளைக் கொண்டு, பழபபடி உள்ளக்களிப்புடன் வீட்டுக்குத் திரும்புதல்போல, உண்மைத் தேசாபிமானிகள், அந்நிய பாஷைகள் இப்போது எவ்வளவுதான் சிறப்புற்றிருந்தாலும், அதில் எவ்வளவு அறிவாகிய பொருளடங்கியிருந்தாலும், அதில் அவர் எவ்வளவு விற்பத்தியடைந்த நிபுணராயிருந்தாலும், அவ்வறிவையெல்லாங்கொண்டே தங்கள் சுயபாஷையை முன்னுக்குக் கொண்டு வருபவரே யொழிய, அதைப் பழமை யென்றிகழ்ந்து கைவிடுவாரல்லர். அப்படிக் கைவிடுவது, உலகத்திலுள்ள பலநூறு தேசங்களில், உலகமுண்டான காலந்தொட்டு, ஒரு தேசத்திலும், ஒருகாலத்திலும் ஈ எறும்புதொட்டு ஒருஜாதியிலும் நடந்ததாயில்லை. ஆகையால் இப்போது தமிழ்மொழி நம் தாய்பாஷையாயிருப்பதனாலேயே அதை அபிவிர்த்தி செய்வது அவசியமே யென்று கடைப்பிடிக்கலாம்.

இரண்டாவது, இத்தமிழ்ப் பாஷையே விர்த்தியடையத்தக்க அவ்வளவு நல்ல பாஷையோ, அன்றோ, என்று பார்க்குங்கால், இவ்விஷயத்தில் அதன் சிறப்பும் பெருமையும் இவ்வளவு அவ்வளவு என்று வரையறுக்க முடியாது. தமிழ் என்னும் மொழிக்கு இன்பம் என்னும் பொருள் படுவதனாலேயே, அப்பாஷையைப் பேசுவோர்க்கு அது விளைவிக்கக்கூடிய இன்பத்தின் அளவை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். அன்றியும், இப்பாஷையில், அநாதிகாலந்தொட்டு, பற்பல விஷயங்களைப் பற்றி அரிய பெரிய வித்வான்கள், தங்கள் அறிவிற்றோன்றிய உண்மை மொழிகளைச் சேமித்து வைத்த பெட்டகங்களுக்கு ஒப்பான திவ்ய கிரந்தங்களின் தொகையும், அவைகளிலடங்கிய மாதுரிய சாதுரியங்களும், உண்மைக் கருத்துகளும் எடுத்துரைக்கப் போனால், அவை சொல்லிலும் அடங்காது, ஏட்டிலும் அடங்காது, என்னாலுமாகாது, மற்றெவராலுமாகாது. இதனால், அது எவ்வளவு விரிவும் அமைப்பும் உடைய பாஷை யென்று பட்டப்பகல் வெட்டவெளிச்சமாகத்தெரியும். ஸம்ஸ்கிருதத்துடன் தோழமையுற்றுச் சேர, சோழ, பாண்டிய அரசர்களால் தொன்று தொட்டு ஆதரிக்கப்பட்டு, மூன்று மகாசங்கங்களில்கூடிய மகா வித்வான்களாலும் ஔவை, திருவள்ளுவர், கம்பன், பட்டணத்தடிகள், தாயுமான சுவாமிகள்முதலான அளவிறந்தகவிச்சிங்கங்களாலும் வளர்ச்சியுற்று, நெடுங்காலம்சிறப்புற்றோங்கிவருகிறஇம்மகாபாஷை இக்காலத்தில்மட்டும் அபிவிர்த்தி செய்யத்தக்க தன்றென்று வெற்றுரை பிதற்றுவோர், (இக்கடல்சூழ்ந்த உலகத்திலுண்டெனில்,) அவர் பித்தராயிருப்பார் போலும்! அப்படிச்சிந்தையற்றுப்பிதற்றித்திரியும்பேதைகளைப்பற்றி இங்கு எடுத்துக் கூறுவதற்கு எவ்வாற்றானும் காலம் நெருங்கவில்லை. ஆகவே, தமிழ்மொழி, முன் பெரியோர்களால் ஆதரிக்கப்பட்டுச் சிறப்புற்று வந்ததுபோல், இக்காலத்திலும், இக்காலத்துப் பெரியோர்களாலும் சாமான்னியராலும், தங்களாலாகுமட்டும், ஆதரிக்கத்தக்கபாஷையேயென்று இதனால்விளங்கும்.

மூன்ருவது, இத்தமிழ்மொழி இதுவரைக்கும் எவ்வளவோ பெருமையுற்றிருந்தும், அது இப்போது பலகாரணங்களால் அடைந்துவரும் க்ஷீண தசையை உற்று நோக்கினல், அதை நாம் இப்பொழுது எவ்வளவோவருந்திப் பாடுபட்டுக் கைதூக்கி நிலைபெறச்செய்ய வேண்டியது அவசியம். அது சுயபாஷையாயிருப்பதனுலும், நல்லபாஷையாயிருப்பதனுலும் அதை முன்னுக்குக் கொண்டுவரவேண்டிய அவசியத்தை இரட்டிக்கின்றது. கனவான்களே, இக்காலத்தில் தோட்டி முதல் தொண்டமான் வரையில் அங்கிலேயபாஷை கற்கப்போனது நமது சுயபாஷையைத் தலையெடுக்க வொட்டாமற் செய்கின்றது. அதில், தாம் கற்கும் கல்வி தினையளவேயாயினும், அதைப் பனையளவாகவெண்ணி, அங்கிலேயபாஷையே தங்கள் உடன்பிறப்புப் போலவும், மற்றச் சுயபாஷைகளைப் பேசினல், காஞ்சிரங் காயைச் சுவைப்பதுபோலக் கசப்பாயிருக்குமென்றும் பாவித்து, எப்போதும் இங்கிலிஷ் பேசுவதிலேயே, மகாவிகடன் சொன்னதுபோல, "சறுக்கிவிழுந்து மண்டையுடைந்தாலும்," அதைப் பெருமையென்று செருக்குவார் அனேகர், அனேகர்! இவர்களுக்கு என்றுதான் நல்லறிவு பிறந்து, சுயபாஷாபிமானம் முதலியன உண்டாகின்றனவோ, அது ஈசனுக்கேவெளிச்சம். அங்கிலேயபாஷை, முக்கியமாய், நம்மையாளும் நீதிபராகிய அங்கிலேய ராஜாங்கத்தார் பாஷையா யிருப்பதனுலும், அதில் அனேக அறிவு விளக்கத்திற்கேற்ற நூல்களிருக்கின்ற காரணத்தாலும், அன்றியும், இப்போது இந்தியாதேசம் முழுதும் ராஜாங்க விஷயமாகவும் மற்றும்சில துர்லபமான பொதுநோக்கங்கள் விஷயமாகவும், முற்காலஸம்ஸ்கிருதம் போல் பொதுபாஷையொன்று சிறுபான்மையில் அவசியமா யிருக்கின்றதாலும், நாம் இயன்ற அளவுக்கு அதைக் கற்கவேண்டியது அகத்தியந்தான், தடையில்லை. அந்தப்பெருதவியையும் பெரும்பாக்கியத்தையும் நான் வாக்காலிகழ்ந்து கைவிடுவேனல்லேன். ஆனுலும், நண்பர்களே, அதற்கு எவ்வளவு அவசியமிருந்தாலும் அதற்காகசுயபாஷையைக்கைநழுவவிடவேண்டுமோ? 'அரசனை நம்பிப் புருஷனைக் கைவிடலாமா'? 'குளிக்கப்போனவர் சேற்றைப்பூசிக் கொண்டு வருவது,' அழகோ? இப்படிச் சொல்லுவதனுல் நான் அங்கிலேயம்படித்த நன்றியை மறந்துவிட்டேனென்று சபையோர் தப்பெண்ணங் கொள்ளக் கூடாதென்று தாழ்மையாய் எச்சரிக்கை செய்துகொள்ளுகிறேன். இல்லை, இல்லை. யார்மறந்தாலும் அதை நான் மறவேன். ஏனெனில், அவ்வங்கிலேயமின்றி நான் இப்போது இவ்வாறு எடுத்துரைக்கத் துணிவு பெறமாட்டேன். அவ்வங்கிலேயம் முன்இருந்த நிலையும் அது காலாந்திரத்தில், அத்தேசத்தோருடைய முயற்சியினுல் வளர்ச்சியுற்று, இப்போதிருக்கின்ற அற்புத நிலையும், பார்த்த பயனன்ருே, இப்போது என்னை இம்மொழிகள் சொல்லத் தூண்டியது? மேலும், எவ்வளவுதான் மற்ருெரு பாஷையைப் படித்தாலும் அதனுல் நம்முடைய சுயபாஷையைக் கைவிடக்கூடாதென்ற உட்கோளுக்கு அங்கிலேயரே சாட்சி பகர்வார்கள், அதெப்படியென்ருல், நம்மை இப்போது அங்கிலேயர் ஆண்டுவருவதுபோல முன் அவர்களையே 'நார்மன்ஸ்' என்னும்ஜாதியார் அடக்கியாண்டு வந்தபோது, அவர் அங்கிலேயநாட்டில் 'நார்மன்' பாஷையை நிலைநிறுத்தப் பார்த்தும் முடியாமல், ராஜாங்க பாஷையுங்கூட அங்கிலேயமாய்த்தான் இருக்கவேண்டுமென்று, அங்கிலேய ஜனங்கள் தமது சுதேசாபிமானத்தாலும், ஊக்கத்தாலும், ஒற்றுமையாலும் ஒரேபிடியாய்க் கடைப்பிடித்துச் சாதிக்கவில்லையா? முன்னமே நமக்குச் சுயபாஷாபிமானம் இருக்கவேண்டியதுபோக, நம்மையாளும் பெரியவர்களே, நமக்கு இவ்விதமாயும், இப்போது நேரிட்டு அங்கங்கே சொல்லியும், புத்தி புகட்டிவரும்போதும் அதைக்கேளாமல், "சுயபாஷை மாண்டாலும் நமக்கென்ன" "எல்லாம் அங்கிலேயமாய்ப் போனுலும் வருங்குறையென்ன" என்று ஏமாறியிருக்கத் தலைவிதியோ? ஆகையால், கனவான்களே, இவ்வெல்லாக் காரணங்களாலும், நம்முடைய பாஷையை, எவ்விதத்திலும், எல்லாவிதத்திலும், முன்னுக்குக்கொண்டு வருவதற்கு இதுவே சமயம்! நம் துரைத்தனத்தாருடைய காருண்யமும் நீதியு மமைந்த ஆளுகையிலேயே இதை நாம் சாதித்துக் கொள்ளாவிட்டால்

பின் எப்போது சாதித்துக்கொள்ளுகிறது? காற்றுள்ளபோதே யன்றோ தூற்றிக்கொள்ள வேண்டும்? மேல்வருங்கதி யின்னபடி என்றதை யாராலெடுத்துரைக்க வசமாகும்? நாம் எதையும் உண்மையாய், திண்மையாய், ஓயாமற் கேட்டால், அதற்கு அங்கிலேயர் கருணையோடிசைந்து, நமக்கு அனுகூலம் செய்ய ஆயத்தமாயிருக்கிறார்கள். கல்விச்சாலைகளில் சுயபாஷைகளை இப்போதைப்போல் "சிரட்டைநீரைக்கொண்டு சமுத்திரம் இன்னபடி" என்பது போலவன்றி ஏராளமாய்ச்சொல்லுவிக்கும் அவசியத்தை நாம் உண்மையோடு குறையிரந்து கொண்டால், அந்த அபேக்ஷை நடக்காத தொன்றன்று. இந்தப்படி நம் சுயபாஷைகள் கைதாழ்ந்து வருவதற்கு அங்கிலேயப் பயிற்சியே ஒருகாரணமாயிருந்தும், அதுவே இரண்டுகாரணங்களாகத் தீர்கின்றது. அதுஎப்படியென்னில், நம்மவர் அங்கிலேயம் படிப்பதே சுயபாஷைக்குச் சற்று தளர்ச்சியைக் கொடுப்பதுடன் இங்கிலீஷ்படித்த நம்மவர் சுயபாஷையை மறந்தோ, அல்லது, வேண்டுமென்றோ, அல்லது, சுயபாஷையை யறியாமலிருப்பதனால் அத்தனைக்கும் அங்கிலேயம் பாடமேறியிருக்குமென்ற பொய்யான அவஸ்தைபாராட்டியோ, அல்லது, அங்கிலேயம்படித்த முதிர்ச்சியில் தங்கள் வாழ்வு அதற்கே போதுமானதாய் மற்றொன்றுக்கு நேரமில்லையென்ற வெறுஞ்சாக்குச் சொல்லியோ, அதைக் கைவிடுவதனால், அதற்குக் கடைசியாக அவர்களிடமாய் வரக்கூடிய ஒருசகாயமும் அற்றுப்போகின்றது. இவ்விரண்டுகாரணங்களும் போதாமல் அங்கிலேயத்தில் யாதொரு சம்பந்தமுமின்றி, பழமையே பெரிது, இப்போது நடக்கிறதெல்லாம் கலியின் சேஷ்டையென்று வாளாவிருக்கும் கர்ணாடகருடைய (விலக்குகளொழிவாக) சிற்றறிவும், குறுகியஎண்ணமும், பொதுநலநோக்கக்குறைவும், சோம்பலும்சேரவே, சுயபாஷைத் தளர்ச்சிக்கு மூன்றாவது காரணம்பிறந்து, சுயபாடை பாடையேறும் நிலைமையில்வந்து விடுகிறது. இத்தனை இடையூறுகளின் மத்தியில், இன்று இங்கு கூடியகனவான்களைப்போன்ற பொதுநலப்பிரியர்கள் சுயபாஷைகளை (இவ்விடத்தில் தமிழை) முன்னுக்குக் கொண்டுவர, எவ்வளவு ஊக்கத்துடனும் உறுதியுடனும் உழைக்கவேண்டியதென்று தானேவிளங்கும்.

இந்தப்படியாக, தமிழ் பாஷையை அபிவிர்த்திசெய்யவேண்டியது அவசியமென்று மூன்றுகாரணங்கள் வகுத்துக்காட்டினேன். அவை யாவன:—

முதலாவது, தமிழ் நம் தாய்பாஷையாயிருப்பதனாலே,

இரண்டாவது, தமிழ்மொழி, விர்த்தி செய்வதற்கு ஏற்றபாஷையாயிருப்பதினாலே,

மூன்றாவது, அது, பலகாரணங்களால், தற்காலம் கைதாழ்ந்து வருவதனாலே.

இது நிற்க, இனித் தமிழ் பாஷையை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்கள் இன்னவையென்று, எனக்குத்தோன்றிய மட்டும் எடுத்துக்கூறுவேன்.

(இன்னும்வரும்)

தி. லக்ஷ்மணபிள்ளை.

## அங்கிலேயரின் குணாகுணங்கள்.

அங்கிலேயர் நமது தேசத்தைக் கைப்பற்றியாளத்தொடங்கி சுமார் ௧00-வருஷங்களாகின்றன. சென்ற ௫0-வருஷகாலமாக இத்தேசத்தில் உத்தியோகம் காரணமாகவும், வர்த்தகம் காரணமாகவும், இன்னும் பல ஜீவனவகை காரணமாகவும் இங்குவந்து வசிக்கும் ஐரோப்பியர்தொகை ஏராளமானதென்றே சொல்லத்தகும். அப்படியிருந்தும், அவர்கள் நம்மோடும், நாம் அவர்களோடும் தங்கு தடையின்றித் தாராளமாய்க் கலந்து பழகுவது சிறிதுமின்மையால், இரு தேசத்தாரும் ௨0, ௩0-வருஷகாலம் வரையில் ஒரே தேசத்தில் ஒரே இடத்தில் வசித்துக்கொண்டிருந்த போதிலும், ஒருவர் மற்றொருவருடைய குணாகுணங்களை உள்ளபடியறியச் சிறிதும் வகையின்றிப் போய்விட்டது. இதனால் இருஜாதியாரும் இத்தேசத்தில் என்றென்றைக்கும் அந்நியர்களாகவேயிருந்து ஜீவித்து வருகிறார்கள். நாம் அங்கிலேயஜாதியாருடைய குணாகுணங்களை யுள்ளபடியறியவேண்டுமானால், அவர்கள் சொந்ததேசத்திற்குச் சென்று அவர்கள் மத்தியில் வசித்

துக்கொண்டு அவர்களோடு கலந்து பழகிவர வேண்டும். அங்கிலேய ஜாதியாருடைய பிரபல்லியமான ஒரு குணமென்னவென்றால், அவர்கள் எப்போதும் அந்நியர்களைக் கண்டால் எளிதில் அவர்களோடு கலந்து பேசாமல் மௌனம் சாதித்து, அவ்வந்நியர்களை நெருங்காமல் ஒதுங்கிநிற்பதாம். இந்த ஒரிக்குணம் அந்நிய தேசத்திலிருக்கும் போதும், அந்நியர்கள், பரிச்சியமில்லாதவர்களிவர்களைக் கண்டபோதும் மட்டும் வருகிறதேயன்றி, தங்கள் சொந்த தேசத்திலும் தங்களுக்குத் தெரிந்தவர்கள் பழகினவர்களைக் கண்டவிடத்தும் வருகிறதில்லை. அப்பொழுது அவர்கள் வெகு சல்லாபமாயிருந்து தங்களுக்கு இயற்கையான குணங்களை எல்லாம் ஒளிக்காது காட்டி யொழுகுவார்கள். இது அவர்களுடைய ஜாதிக்கே இயல்பான குணமாயிருத்தலால் பொதுவாய் அவர்களுடைய குணகுணங்களை யறிந்துகொள்ள நாம் அவர்களோடு முதலில் நெருங்கிப் பழகவேண்டும். அப்படிக்கில்லாமல் தூர நின்று பார்த்தால் அவர்கள் குணகுணங்கள் உள்ளபடி நமக்குச் சிறிதும் விளங்காது; அவர்களைப் பற்றி நம் புத்திக்குப்படும் அபிப்பிராயங்களெல்லாம் தப்பாயிருக்கும். இத்தேசத்தில் இருஜாதியாரும் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழக வகையின்றி, தூரத்திலிருந்தபடியே ஒரு ஜாதியார் மற்றொரு ஜாதியாரைப்பற்றி மதிக்க முயல்வதால், இரு ஜாதியாரும் ஒருவரைப் பற்றி யொருவர் வீணான தப்பபிப்பிராயங்கள் கொண்டு ஆளுவோர்க்கும் ஆளப்படுவோர்க்கும் அதிக அனுதாபமின்றி யிருக்கவும், சில சமயங்களில் ஒருவரை யொருவர் தூஷித்துத் தூற்றவும் ஹேது உண்டாகிறது.

இதுநிற்க, நாம் அங்கிலேயரின் குணகுணங்களை யுள்ளபடி யறியவேண்டுமானால், அவர்கள் தேசத்திற்குச் சென்று அவர்களோடு கலந்து பழகியே யறியவேண்டுமென்று சொன்னோம். அப்படி அத்தேசத்துக்குப் போய்ப் பார்த்து வரும் பாக்கியம் நம் தேசத்தார் எல்லோருக்கும் கொடுத்து வைக்கப்படவில்லை. நம்தேசத்தவரில் கற்றுத்தேர்ந்து கைப்பொருளுள்ளவர்களும் அத்தேசத்துக் குளிர் பனிக்கும், இத்தேசத்துக் குருட்டாசாரங்களுக்கும் பயந்து சமுத்திரத்தைக் கடந்து போக அஞ்சி நிற்கிறார்கள். இவ் விடையூறுகளுக்குத் துணிந்து அத்தேசத்துக்குப்போய்வரும் பாக்கியம்பெற்ற நம் தேசத்தார் சிலர், அவர்கள் நடுவேயிருந்து பழகிய பின், அவர்களைப்பற்றிக்கொள்ளு மபிப்பிராயங்கள், நாமித்தேசத்திலிருந்து அவர்களைப் பற்றிக்கொள்ளும் அபிப்பிராயங்களைவிட மேலானவையாகவேயிருக்கின்றன. ஆகையால் நம்மவர்களிலே இங்கிலாந்துக்குப் போய் அங்கிலேயரோடு நெருங்கிப் பழகிவந்தவர்கள் அவர்களைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொள்கிறார்களென்று சற்று விசாரிப்பது ஒக்கும். இந்த விசாரம்செய்து நாம் ஆய்ந்து தேறும் விஷயங்களையும் அபிப்பிராயங்களையும் சமயம் நேர்ந்துழி இப்பத்திரிகையில் வெளியிட்டுவருவோம்.

இப்பொழுது இது விஷயமாய் நாம் ஆய்ந்தறிந்த ஒரு புத்தகத்தைக்குறித்துப்பேசுவோம். நமது தேசத்தவரில் ஒருவரும் பெங்காள வாசியுமாகிய பாபு டி. என். முகர்ஜி யவர்கள் க௲அ௬ - ம்ஹூ லண்டனில் வைக்கப்பட்ட பெரிய பொருட்காக்ஷி சாலைக்கு இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட காக்ஷிப்பொருள்களுடன் இத்தேசத்துக்குப் பிரதிநிதியாக இந்தியா கவர்ன்மெண்டாரால் அனுப்பப்பட்டுச் சென்றார். அவர் இத்தேசத்தை விட்டுச் சென்று இங்கிலாந்தில் அ-மாசகாலம் தங்கியிருந்து, அத்தேசத்தாருடன் ஒட்டியுறவாடி அவ்விடத்துள்ள பல விசேஷங்களையும் பார்த்துக்கொண்டு, ஐரோப்பாவிலுள்ள தேசங்கள் சிலவற்றையும் சுற்றிப்பார்த்துக்கொண்டு, இந்தியாவந்து சேர்ந்தார். அவர் இத்தேசத்துக்குத் திரும்பிவந்ததும் ஆங்கிலேய தேசத்திலும் ஐரோப்பாவிலும் அவர் பார்த்தறிந்த விஷயங்களையும், அவ்விடத்து ஜனங்களைப்பற்றி யவருக்குப்பட்ட அபிப்பிராயங்களையும் காகிதத்தில் வரைந்து அச்சிட்டு, அவற்றை ஒரு புஸ்தகரூபமாய் வெளிப்படுத்தி யிருக்கிறார். அங்கிலேயருடைய குணகுணங்களையும், அவர்களுடைய தேச ஜன ஆசாரங்களையும், அவர்கள் குடித்தன ஏற்பாடுகளையும் பற்றி இவர் நோட்டம் செய்து அறிந்தபின் வெளிப்படுத்தியிருக்கும் விஷயங்கள் நம்மவர் கவனிக்கத் தக்கனவாக விருக்கின்றன.

"குணநாடிக் குற்றமுநாடி மிகைநாடி மிக்கக் கொளல்" என்னும் மூத்தோர் வாக்கியப்படி நம்மவர்கள் அவர்களிடத்திலுள்ள குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்தறிந்து இவ்விரண்டில் அவர்களிடத்து மிகுதியாயுள்ள தெது வென்று பார்ப்பார்களானல், குற்றத்திலும் குணமே மிகுந்திருக்கக் காணுவார்கள். நாம் அவர்கள் குணம் குற்றம் இரண்டையும் சரிசமமாக ஆராய்ந்து பார்க்கையில் குற்றமாயுள்ளதை விலக்கிக் குணமாயுள்ளதைக் கிரகித்துக் கொள்ள மனமுடையவர்களா யிருப்போமாயின், அவர்களிடத்தில் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் மிகவுளவெனக் காணப்படும். அப்பாடங்கள் இன்ன வென்பதைப் பற்றி மேலே சொன்னவர் கண்டெழுதி யிருக்கும் அபிப்பிராயங்களைக் கொண்டு ஆராய்ந்து நம்மவர் புத்தி போதனைக்காகக் கீழே சில அம்சங்களை யெடுத்தெழுதுகிறோம்.

### தன்னயமறுப்பு.

தன்னயமறுப்பு, அதாவது சுயநயம் பாராட்டாமை. இக்குணம், அங்கிலேயருக் குண்டென்று நாம் சொல்லவந்தால் இத்தேசத்தில் அவர்களை யறிந்தவர்கள் நம் வார்த்தையைச் சிறிதும் நம்பார்கள். ஆயினும் இக்குணம் அவர்களிடத்தில் அதிகமாயுண்டு. எவ்விதத்தில்? நிச்சயமாய்ப் பிறனொருவனுடைய நயத்தை நாடித் தன்னயத்தை மறக்கும் விதத்தில் அல்ல; அக்குணம் நமக்கேயுண்டு. அங்கிலேயர் சுயநயம் பாராட்டாதவர்களென்று பின்னெவ்வாறு சொல்லலா மெனிலோ, அவர்கள் தேசத்துக்குப் பொதுவாய் ஒரு நன்மை செய்யும் விஷயத்தில் அங்கிலேயரைப்போல் தன்னயம் பாராட்டாதவர்க ளுலகத்திலில்லை யென்றுணரத் தகும். ஒருவன் நித்தியப்படி அயலார் அந்நியரோடு பழகுவதில் என்ன தான் சுயகாரியப் புலியா யிருப்பினும், தன் தேசப்பொது விஷயமாய் ஒரு நன்மை செய்ய வேண்டு மென்று ஒரு காரியத்தை மேற் போட்டுக்கொண்டால், அது விஷயத்தில் தன்னுஸ்தியை எல்லாம் வேண்டு மானுலும் அடமாறிவிட்டு, கடைசியில் தான் மேற்போட்டுக் கொண்ட காரியம் கைகூடினுல் அதுவே ஒரு பெரிய திதாப்பாக எண்ணி மன்முவந்து திர்ப்தியடைவான். இப்படித் தன் தேசக்ஷேமார்த்தம் தன்னயத்தைப் பாராட்டாமல்விட்டு, கடைசியில் கஷ்டகதியடைந்த தனவந்தர்கள், தேசோபகாரிகள் எத்தனையோ பேர்கள் அத்தேசத்திலிருக்கிறார்கள். ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு கிராமத்திலும் அவரவர்கள் நிலைமைக்குத் தக்கபடி பொதுநலஞ் செய்துவரும் பரோபகாரிகள் எத்தனையோபேர்க ளிருக்கக் காணலாம். தமது ஆஸ்தியை எல்லாம் இழப்பதன்றி அவர்கள் மனம் வைத்துப் பரோபகாரம் செய்யும்வகையில் உயிரையும் பலிகொடுக்க வேண்டிவந்தால் அதற்கும் பின்னடையார்கள். உலகப்பிரசித்தியாய்ச் சரித்திரத்தில் பேர்போன *ஹாம்ப்டன், †காப்டன் இவர்களைப்போல அவரவர்கள் சக்திக்குத் தக்கனமட்டும் அவர்களிருக்கு மூர்களில் அல்லது வசிக்கு மிடங்களில் பரோபகார சிந்தையோடு பொதுநலமுயற்சி செய்து வருபவர்கள் அத்தேசத்தில் ஏராளமாய் உளர். இப்படிப்பட்டவர்கள் பொதுநல விஷயமாய்த் தன்னயம் பாராட்டாது பல கஷ்டங்களுக்கும் உள்பட்டு ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிட்டால், அவர்கள் தாங்கள் பட்ட கஷ்ட நஷ்டங்களைப் பற்றி பெருமை பேசிப் புகழ்ந்துகொள்வதில்லை. ஏனெனில், இவர்களைப்போல் தன்னஷ்டத்தைப்பாராமல் பொதுநலத்துக் குழைப்பவர்கள் அத்தேசத்தில் எத்தனையோ பேர்களிருக்கிறார்கள். அவர்களுக்கு நடுவே ஒருவன் தான் செய்த நற்காரியத்தைப்பற்றிப் புகழ்ந்துகொள்ளும் புகழ்ச்சி யென்னத்துக்காகும், நிர்வாண தேசத்திலல்லவோ கோவணங்கட்டினவன் நாகரீகனுவான். எல்லோரும்உடல்மறைய ஆடையுடுக்கும்தேசத்தில் ஒருவன் மட்டும் தான் உடைதரித்திருப்பதைப் பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டால் அது என்னமாயிருக்கும். அப்படியேதான் அங்கிலேயதேசத்தில் பரோபகாரிகள் நிலைமையும். இப்படி அங்கிலேயரில் பெரும்பாலார் பொது ஜனக்ஷேமத்தைக்கூடியமட்டில் தங்கள்சொந்த க்ஷேமத்தை மறந்துழைத்துவரும் பெருந் தன்மையுடையவர்களா யிருப்பதாற்றான் அச்சாதி

* Hampden † Cobden

யார் உலகெங்கும் பிரக்கியாதி பெற்று இப்புவியில் மற்றெல்லாத் தேசத்தாரையும்விடக் கீர்த்திப்பிரதாபத்தில் மேன்மை பெற்றுச் சிறந்து வாழ்கிறார்கள்.

தரும சிந்தை.

இக்குணத்திலும் அவர்கள் முன்சொன்னது போலவேயிருப்பார்கள். அத்தேசத்தில் ஒருவன் என்ன ஐசுவரியவானானாலும், தன் வீட்டு வாசலில் பசியென்று வந்தவனுக்கு 'ஐயோ!' என்று இரங்கி அரைக்காசுங் கொடுக்க மாட்டான். இப்படிப்பட்டவர்களை நாம் கல்நெஞ்சுள்ள குரூரர்களென்றே கசந் துரைப்போம். தனியாக ஒருவனுக்குப் பிச்சை கொடுக்கச் சிறிதும் மனம் வராத இவர்கள், பாடசாலைகளுக்கென்றும், வைத்திய சாலைகளுக்கென்றும், வினோதசாலை, புத்தகசாலை முதலிய இன்னும் பொதுநலப் பிரயோசனமான ஸ்தாபனங்களுக்கென்றும் ஆயிரம் பதினாயிரமாகவும், லட்சம் பத்துலக்ஷமாகவும் கணக்கு வழக்கின்றிக் கொடுப்பார்கள். இப்படி லக்ஷக்கணக்காய்த் தர்மஞ் செய்கிற ஒருவனிடத்தில் தெருவில் போகும் பிச்சைக்காரன் எவனாவது "ஐயா, ஒரு காசு" என்று கையை நீட்டினால் அவனுக்கு அரைக்காசும் கொடுக்கா தொழிவதோடு அவனைப்பிடித்து உடனே போலீசாரிடம் ஒப்புவித்து விடுவான். இதற்கெல்லாம் காரணமென்னவெனில், அங்கிலேயர் எப்போதும் எல்லா விஷயத்திலும் ஒரு நியமம் ஏற்படுத்திக்கொண்டு, அனுஷ்டானத்தில் அந்த நியமந் தவறாது நடந்து கொள்ளுபவர்கள். பிச்சை கொடுக்கட்டும், அல்லது ஒரு விருந்து செய்யட்டும், அல்லது வேடிக்கை செய்யட்டும், அல்லது வேறு என்னதான் செய்யட்டும் எல்லாவற்றிற்கும் அததற்கேற்ற நியமம் ஒன்றுண்டு. காரியத்தில் என்னகேடு வருவதாயினும் அந் நியமம் தவறாது நடந்துகொள்ளப் பார்ப்பார்கள். நம்மிடத்தில் அந்த ஏற்பாடு சுத்தமாகஇல்லை. பிச்சை பாத்திர மறிந்திட வேண்டுமென்பது அவர்களுடைய கொள்கையாக விருப்பதுடன் நம்முடைய சாஸ்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அக்கொள்கைப்படி அவர்கள் சிறிதும் பிறழாமல் காரியத்தில் நடந்து கொள்கிறார்கள். நாமோ பிச்சை யிடும் பொழுதும், மற்றப்படி வேறு தான தர்மம் செய்யும் பொழுதும் அக்கொள்கையை மனதில் வைத்துச் சிறிதும் நடப்பதில்லை. நாம் பாத்திரமறிந்து பிச்சை கொடுக்காமையால் தினம் எத்தனையோ அபாத்திரமானவர்களுக்குப் பிச்சை கொடுத்து, தேசத்தில் வீணாகச்சோம்பேறித் தனத்தை விருத்தி செய்கிறோம். நாம் இப்படி அபாத்திரர்களுக்குக் கொடுக்கும் பிச்சையால் நமக்கு தருமம் விளையுமென்று வீணாய் மனோராச்சியம் செய்து கொள்கிறோம். வாஸ்தவத்தில் இப்படி நாம்கொடுக்கும் பிச்சையெல்லாம் உற்றுப்பார்க்கப் போனால் "காசைக் கொடுத்துத் தேளைக் கொட்டிக் கொள்வது" போல பாபத்தை விலைக்கு வாங்குவதற்குச் சமானமேயொழியவேறில்லை. அங்கிலேயர் செய்யும் தருமமெல்லாம் பொதுநலத்தை நாடிச்செய்து வருகிறார்கள். ஒருநாழிகை வேலை செய்யத் தக்கவனுக்கு நாம் ஒருகாசு பிச்சை கொடுத்தால் அந்தக்காசைக்கொண்டு அவன் பிழைத்துப் போகிறான். அவன் செய்யக்கூடிய ஒருநாழிகை வேலை தேசத்துக்குப் பயன் விளைக்காது விருதாவில் தானே போகிறது. இப்படி ஒருகாசு தருமம் கொடுக்கத் தக்கவர்களெல்லாம் தங்களாலான தொகையை ஒருங்குசேர்த்து, வயிறுக்கின்றி வருத்தப்படும் ஏழைகளையும் அப்படியே ஓரிடத்தில் கூட்டி, அவ்வேழைகளில் ஆணோ, பெண்ணோ அவரவர்கள் சக்திக்குத் தக்கபடி அவர்களாலாகும் வேலையை வாங்கிக்கொண்டு, அத்தொகையை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தால் அது, எல்லாருக்கும் எவ்வளவு சாதகம் விளைப்பதாயிருக்கும் யோசித்துப் பாருங்கள்.

இதற்கு ஒரு உதாரணம் சொல்லி யின்னும் விளங்கவைப்போம். நமது குக்கிராமங்களில் தினந்தோறும் பொழுது விடிந்தது முதல் உச்சி நேரம்வரையில் எத்தனை தடியர்கள் பிச்சைக்குவருகிறார்கள். இவர்களில் பாம்பாட்டிகளென்றும், குடுகுடுப்பாண்டிகளென்றும், கல்லுளிமங்கன்களென்றும் வருகிறவர்கள் நல்ல கொட்டாப்புளித்தடியர்கள்; ஒவ்வொருவனும் ௫-ஆள் வேலை ஒருமிக்கச் செய்வான். கிராமத்திலுள்ள ஒவ்வொரு வீட்டுக்காரர்களும் இவர்களுக்கு ஒரு பிடியரிசி போடுகிறார்

கள். இப்படி ஒருநாளைக்குக் குறைந்தது பத்துப் பேர்கள் பிச்சைக்குவந்தால் ௧0-ப்பிடி யரிசி யாகிறது. ஒரு கிராமத்தில் சுமார் ௧00-வீடு களிருக்குமானால் அக்கிராமத்தார் மொத்தத்தில் ஒரு நாளைக்குச் செய்யும் தர்மம் நாம் மேலே சொல்லி வந்த கணக்கையே வைத்துக்கொண்டு பார்த்தால் நூற்றுப்பத்து=ஆயிரம் பிடி அரிசியாகிறது. ஒரு ஆழாக்குக்கு ௫-பிடி வைத்துப்பார்த்தால், ௧,000-பிடி அரிசியும் குறைந்தது ௨௫-படி யரிசி யாகிறது. இந்த கிராமத்தார் தினந்தோறும் ௨௫-படி யரிசி தருமத்தில் செலவழிக்கிறார்கள். இந்த ௨௫-படி யரிசியையும் பிடிப்பிடியாய் பெறுகிறவர்களோ வெறுந்தடியன்களா யிருக்கிறார்கள். இத்தடியர்கள், வீட்டுக்குப் பிடியாகவாங்கித் தின்றுவிட்டு, கொட்டாவி விட்டுத் தூங்குகிறார்கள்; அல்லது திருட்டுப் புரட்டு மோசம் முதலிய குற்றங்கள் செய்து இன்னும் வயிறுவளர்க்கப் பார்க்கிறார்கள். இந்த ௧00-வீட்டுக்காரர்களும் வீட்டுக்கு ஒருபிடியரிசியாகக் கண்டபடி விருதாவில் கொடுப்பது மொத்தமாய்ச் சேரும் ௨௫-படி அரிசியை ஒருங்கு சேர்த்து (அக்கிராமத்துக்குப் பொதுப் பிரயோசனமான ஒரு வேலை யாரம்பித்து) பிச்சைக்குவரும் தடியர்களிடத்தில் நாலுமணிநேரம் வேலைவாங்கிக் கொண்டு ஆளுக்கு ஒருபடியரிசி கூலியாகக் கொடுத்துவந்தால் ஒரு நாளைக்கு பத்துப் பேர்களிடத்தில் ௮-மணி நேரத்துக்குமேல் வேலை வாங்கலாம். இந்தவேலை வீணாகத் தானே போகிறது. இவ் வேலையை வீணாகப் போக விடுவதைக் காட்டிலும் இவர்களிடத்தில் நாம் சொன்னபடி வேலை வாங்கி கிராமத்துக்குப் பொதுவான பாடசாலைக்கு இருப்பிடமாக ஒரு கட்டடம் கட்டக்கூடாதா? அல்லது கிராமத்தார் ஒன்றுகூடிப் பொதுவிஷயத்தைப்பற்றிப் பேச ஒரு சாவடி கட்டக்கூடாதா? இன்னும் அவரவர்கள் புத்தி யுக்திக்குத் தோன்றியபடி கிராமத்துக்குப் பொதுப் பிரயோசனமான தோட்டம், நந்தவனம் முதலிய வேலைகள் எவ்வளவோ செய்துகொள்ளக் கூடாதா? கிராமத்தாரிடத்தில் ஒற்றுமையும் கட்டுப்பாடு மிருந்து, பொதுவிஷயங்களில் சிரத்தை எடுத்துக்கொண்டு அவற்றில் தமது புத்தியையும் காலத்தையும் செலவிடத்தக்க பொது நன்மை நாடிகளு மிருந்தால், இவையெல்லாம் தானே நடக்கும். இன்னும் எத்தனையோ உபகாரமான காரியங்களும் எளிதில் செய்து முடிக்கப்படும். நம்மவர்களுக்குள் ஒற்றுமை, கட்டுப்பாடு, பொதுநலத்துக் குழைக்கும் தன்மை இவையில்லாததினால் இப்படி எத்தனையோ பொருளும் காலமும் வேலையும் தக்கபடி உபயோகிக்கப்படாமல் விருதாவில் கழிந்துபோய், தேசத்தில் வறுமையும் சோம்பேறித்தனமும் மேலிட்டு வருகின்றன. இப்படி கண்மூடித்தனமாய் நாம் பிச்சையிட்டு வருவதினால் எத்தனையோ ஜனங்கள் வீண்காலப் போக்குசெய்து வயிறுவளர்த்து வருகிறார்கள். நாம் உதாரணமாக மேலே கணக்குப்போட்டுக் காட்டியதுபோல் இத்தேசத்தில் கண்மூடித்தனமாய் பிச்சையிடுவதால் இந்தியா முழுமைக்கும் ஒரு நாளைக்கு ௧௬-கோடி மணிநேரம் வீண்போகிற தென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்தக் காலத்தை வீண்போகவிடாமல், ஒரு நாளைக்கு இந்தியா முழுமையிலும் ௧௬-கோடி மணி நேரத்திலாகும் வேலை இச்சோம்பேறிகளிடத்திலிருந்து வாங்கப்பட்டு வந்தால் தேசக்ஷேமத்துக்கு அவசியமான கைத்தொழில்வேலைகள் எவ்வளவு நடந்துவரக்கூடும்; அதனால் இத்தேசம் நாளடைவில் எவ்வளவு விர்த்திக்குவரலாம், யோசித்துப்பாருங்கள். இதை எல்லாம் கணக்குப்பார்த்து நம் க்ஷேமவிர்த்திக் . குபயோகப்படுத்திக் கொள்ளாமல் நம்தேசத்தார் க்ஷீணதிசை யடைந்து வருகிறார்கள், அங்கிலேயரும் அவர்களைப் போல் வளம்பெற்ற மற்ற ஐரோப்பியர் அமெரிக்கரும் இவைகளையெல்லாம் மனதில் வைத்து நுட்பமாய்க் கணக்குப் பார்த்து ஒரு காசானாலும், அரைமணி காலமானாலும் பயனின்றிக் கழியவிடாமல் பிரயோசனத்தையே நாடி உபயோகித்து வருவதால் அவர்கள் வரவர ஐசுவரியவிர்த்தி யடைந்து மேம்பட்டு வாழ்ந்து வருகிறார்கள். இதிலிருந்து நாம் தருமஞ்செய்வதில் அங்கிலேயரிடத்திலிருந்து கற்கும் பாடத்தை மனதில் வைத்து நடக்கவேண்டும்.

C. V. S.

## சரித்திரம்.

### இந்துதேசத்தின் பூர்வ ஸ்திதி.

ஒரு தேசத்தின் சரித்திரத்தை எழுதப்புகும் ஒவ்வொருவரும் அத்தேசத்தின் பூர்வஸ்திதியையும், அத்தேசத்தார் வர வர எப்படி விர்த்தியடைந்தார்கள் என்ற பற்பல விஷயங்களைப் பற்றியும் எழுதும்போது வாஸ்தவமாக உள்ளதை உள்ளபடி எழுதுவதற்கு அவசியமான சமாசாரம் கிடைப்பது அரிது. இக்காரணத்தால் சிலர் தங்கள் தங்கள் மனதிற்குத் தோற்றிய விதமாய் தற்கால சரித்திரத்தை வைத்து முற்காலத்திலிவ்விதமாய்த்தா னிருக்கவேண்டுமென்று யூகித்து எழுதுவார்கள். மற்றும் சிலர் அயல் தேசத்தவர்கள் அக்காலத்தில் என்ன ஸ்திதியிலிருந்தார்களென்று விசாரித்து அதே மாதிரியாக இவர்களு மிருக்கலா மென்று நினைத்து அப்படியே எழுதுகிறார்கள். இவ்விதமாய் எழுதப்பட்ட சரித்திரம் என்ன பிரயோஜனமாகும்? ஆனால் பூர்வத்தில் வசித்த ஜனங்கள் தங்கள் தங்கள் காரியாதிகளை எங்கேனும் எழுதி வைத்திருக்கிறார்களா? முதலில் எழுதுவது வாசிப்பது என்னும் விஷயங்களே அவர்களுக்குத் தெரியாதே! உலகத்தின் நாகரீகம் உயர்ந்து மிகுந்த காலத்திலல்லவோ ஜனங்கள் எழுதப்படிக்கவழி கண்டு பிடித்தார்கள். ஆகையால், மற்றெப்படி நமது தேசத்தின் பூர்வ சரித்திரத்தை அறிவது?

பூர்வத்தில் எழுதவாசிக்கத் தெரியாத காலத்தில் மனிதர் தங்களுக்குத் தெரிந்த காரியாதிகளைத் தங்கள் பிள்ளைகளுக்குத் தெரிவித்து, அப்பிள்ளைகள் பெரியவர்களானவுடன் அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்லி இவ்விதமாய் சமாசாரங்கள் தலைமுறை தத்துவமாய்த் தற்கால ஜனங்களுக்குத் தெரிகிறதுண்டு. அப்படித் தெரிந்த காரியங்களை மனிதர் எழுத வாசிக்கத் தெரிந்தவுடன் புஸ்தகமாக எழுதி வைப்பது சகஜம். அப்படி எழுதப்பட்டிருக்கும் புஸ்தகங்களை வைத்து இப்போது எழுதிவிடலாமல்லவோ? அனேக சாஸ்திரங்கள் நமது தேசத்தில் சமஸ்கிருத பாஷையில் எழுதிவைக்கப்பட்டிருக்கின்றன. புத்தி சாதுரியத்தில் சிறந்தவர்களென்று நமது முன்னோர்களை மெச்சும்படியாய் அனேக கிரந்தங்களை எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதியிருக்கும் சாஸ்திரங்களில் நமது தேசத்தின் சரித்திரத்தில் ஏதாவது ஒருபாகமெழுதப் பட்டிருக்கிறதா வென எங்குந் தேடியும் அகப்படவில்லை. 'இராஜதரங்கணி' என்னும் காஷ்மீர தேசத்தைக் குறித்து ஒரு சமஸ்கிருத பண்டிதர் எழுதியிருக்கும் சரித்திரம் அன்றி வேறு புஸ்தகங்களெங்குமில்லை. இதனால் நமது பூர்வீகர் சரித்திர மென்பதையே எழுதவில்லையோவென விசாரித்தால், அவர்கள் எழுதியே யிருப்பார்கள். ஆனால்நமது தேசத்தின்மேல் அடிக்கடி படையெடுத்துவந்த மகம்மதியர் முதலான அயல் தேசத்தவர்கள் அச்சரித்திர புஸ்தகங்களை ஹதமாக்கி விட்டார்களென்றே மதிக்க வேண்டியதாயிருக்கிறது. மற்ற விஷயங்களில் பாண்டித்தியமடைந்திருக்கும் நமது முன்னோர்கள் இவ்விஷயத்தில் மட்டும் முயற்சி செய்யா திருந்தார்களென்று எண்ண இடமில்லை.

இப்படி நமது தேசத்தின் சரித்திரத்தைப் பற்றிய கிரந்தங்கள் நம்மிடத்திலில்லாமற்போகவே, நமது பூர்விக சரித்திரத்தைப் பற்றிய அறிவு நமக்குண்டாவதற்கு வேறுவழி யென்னவிருக்கிறது? இதைப்பற்றி யோசித்தால், நமது தேசத்துக்கு வியாபார விஷயமாகவும் பற்பல காரியமாகவும் வந்துபோன அன்னிய தேசத்தவர்கள் நம்மைப்பற்றி எழுதியிருக்கும் காரியாதிகளை நாம் சேர்த்து சரித்திரமாக எழுதவேண்டியதாயிருக்கிறது,

பூர்வீகர் என்றும்கௌரவமுடையவர் என்று பொருள்படும் ஆரியர் என்னும் ஓர் வகை ஜனங்கள் முதல் முதல் இந்தியாவுக்கு வடபாகங்களில் உற்பத்தியாய் நாளாவர்த்தியில் வடக்கு கிழக்கு தெற்கு மேற்கு என்னும் நாலு பக்கங்களிலும் பரவி ஆங்காங்கு குடியேறினார்களென்பது ஓர் ஐதீகம். ஐரோப்பிய ஜாதியார் எல்லாரும் இவ்வகுப்பினர் தான். தற்கால ஹிந்துக்களும் இவ்வகுப்பினர் தான் என்று சொல்லும்படியாக நமது பூர்விக பாஷையான சமஸ்கிருதத்தி லுள்ள வார்த்தைகளுக்கும், ஐரோப்பியரின் பூர்வபாஷைகளான 'லத்தின்' 'கிரேக்' பாஷைகளிலுள்ள வார்த்தைகளுக்கு மிருக்கும் சம்பந்தத்தினால் வெளியாகும். இவ்

விதமாக ஆரியர் இந்துதேசத்துக்கு முதல் முதல் வந்து குடியேறும்போது இவ்விடத்தில் ஓர் வகையான இராக்ஷதர் இருந்ததாக வெளியாகிறது. ஆரியரின் கூட்டமதிகமாகவே, அந்த இராக்ஷதர் மலைகளிலும் காடுகளிலும்போய் வசித்தார்கள். அப்படி யிருந்தவர்கள் தற்கால மலைவாசிகளாகிய 'காண்டு'ஜாதியார் முதலானவர்களென்னத் தெரியவருகிறது.

இவ்விதமாக முதல் முதல் இந்தியாவில்வந்து குடியேறின ஆரியர் எவ்வித ஜீவனம் செய்து பிழைத்தார்களென்றால், காட்டு மிருகங்களைப் பட்சித்தும், ஆட்டுமந்தைகளை வளர்த்தும், அப்பால் நிலத்தில் தற்செயலாய் முளைத்துக்காய்த்திருக்கும் அனேகவித கனிகளைப் புசித்தும், அப்பால் நிலத்தில் பற்பலவிதப் பயிரிட்டும் ஜீவித்தார்கள். பொதுவாக அவர்களைப் பற்றி இம்மட்டும் தான் சொல்ல இடமிருக்கிறது. அப்பால் அவர்கள் விர்த்தியானவிதமே இப்படிப்பட்டதென்று இப்போது அறியவழியில்லை. அனேக காலத்துக் கப்பால் அயல் தேசத்தவர்கள் நம்முடன் வந்து கலந்தபோது நாமிருந்த ஸ்திதியை யவர்கள் சொல்ல நமக்குத் தெரிந்த சரித்திரத்தை இனி யெழுதுவோம்.

---

## மாதர்மஞ்சரி.

## ஸாரா மார்ட்டின் சரித்திரம்.

—o—

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்; பொருட் செல்வம்
பூரியார் கண்ணு முள."*—குறள்.

ஒரு பரோபகாரமான விஷயத்தின் பொருட்டு, நம்முடைய உதவியை, அவ்விஷயத்தில் முயற்சி செய்யும் ஒருவர் கோரும்பொழுது, "எனக்கு சாவகாசமில்லை" யென்றும், "நான் ஏழை" யென்றும், சொல்வதற்கு நாக்கு எழுவதை யறிந்திருக்கிறோம். ஆனால், உலகத்தை நம்மாற் கூடியமட்டும் விருத்தி செய்வதற்கு, காலசவகாசமும் பொருளும் அத்தியாவசியம் ஆனவைகளல்ல என்றும், அவை யில்லாமலே, ஒரு சத்காரியத்தை முடிக்க விரும்பினோர், தங்களால் இயன்றமட்டும் முயற்சிசெய்தால், சிறிதாயினும் பயனை அடைவார்களே யொழிய, இகழ்ச்சியை அடையமாட்டார்களென்றும், பின்வரும் சரித்திரத்தால் அறிந்துகொள்ளலாம்.

ஸாரா மார்ட்டின்என்னும்பெண்மணி கிரேட் யார்மௌத் என்னும் பட்டணத்துக் கடுத்த கேயிஸ்டர் என்னும்கிராமத்தில், 1791-ம் வருஷத்தில் பிறந்தாள். அவள் உடுப்புகள் தைத்து விற்பதினால் கிடைக்கும் அற்ப இலாபத்தைக்கொண்டு ஜீவனஞ்செய்யும் ஏழையாயினும், ஆச்சரியப்படத் தக்க சிறந்த நன்மைகளுக்கும் விருத்திக்கும் காரணமாயிருந்தாள். அவள் முயற்சிசெய்தது சிறைச்சாலைகளின் நிலைமையை விருத்திசெய்யும்பொருட்டே. தானாகவே விரும்பிப்படித்தது தவிர வேறு கல்விப்பயிற்சி யில்லாதவளாயும், ஒருநாள் வேலைசெய்யாவிட்டால் அன்றை ஜீவனத்துக்கு வேறு வழி யில்லாதவளாயு மிருந்த இந்த ஏழைப்பெண், தன் சுயபுத்தியினாலும் இரக்கமுள்ள மனதினாலும் மாத்திரம் சிறைச்சாலைகளிலுள்ள தீங்குகளையும் துன்பங்களையும் கண்டு, அவைகளுக்காக மனம்நொந்து, அவைகளை நீக்கும்பொருட்டு ஏற்படுத்தின விலக்குகளைப் பற்றி யோசித்தால், ஆச்சரியமும் மனமகிழ்ச்சியும் உண்டாகின்றன. தன்னூர்ச் சிறைச்சாலையில் இவள் ஏற்படுத்தின ஏற்பாடுகளே, அவ்விஷயத்தை நன்குணர்ந்த பரோபகாரிகள், தத்துவ சாஸ்திரிகள், இராச்சியாதிகாரிகள் முதலியவர்களால், அங்கிலேய தேசமெங்கும் சிறைச்சாலைகளில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

ஸாராமார்ட்டின் சிறைச்சாலைகளைப் போய்ப்பார்க்கத் தொடங்கினபொழுது, அவைகளில், குற்றவாளிகளின் குணத்தையும் புத்தியையும் விருத்திசெய்வதற்கான ஏற்பாடுகள் ஒன்று மில்லை. இப்பொழுதுள்ள பள்ளிக்கூடங்கள், தேவதாவிஷயமான பிரசங்கங்கள், போதனைகள்,* ஒன்றும் அப்பொழுது கிடையாது. சாந்தகுணமுள்ள இச்சிறிய தையற்காரி இதையெல்லாம் மாற்றிவிட்டாள்.

ஒருபெண்பிள்ளை தன்குழந்தையை அடித்து மிருகத்தனமாக நடத்தினாள். அவளைச் சிறைச்சாலையில் அடைத்தார்கள். இரக்கத் துடனும், துக்கத் துடனும், அப்பெண்பிள்ளையைப் பார்க்கும் பொருட்டு, ஸாராமார்ட்டின் முதல் முதல் சிறைச்சாலைக்குப் போனாள். அவளுக்கு அப்பொழுது இருபத்தெட்டு வயது. ஒருவருடைய சிபாரிசுக் கடிதமு மின்றிச் சிறைச்சாலைக் கதவைத் தட்டினாள். யாரிடத்திலாவது தன் னெண்ணத்தை வெளியிட்டால், சிறந்த புத்தி யுள்ளவர்கள்போல், "நீ உன் வேலையைப்பார்; அந்தப் பெண் பிள்ளையின் துற்செய்கையைப் பற்றி உனக்கேன் கவலை" என்று போதிப்பார்களெனப் பயந்து, தன் நினைவை, கூடக்குடியிருந்த தன்பாட்டியாரிடத்திற்கூடச் சொல்லவில்லை. முதலில் சிறைச்சாலைக்குள் விடமாட்டோ மென்று சொல்லி விட்

---

* அருள் ஒழிந்த பொருளால் வருஞ் செல்வங்கள் இழிந்தாரிடத்தும் உளவாதலால், அருளால் வருஞ் செல்வமே செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்தது.

* இவையெல்லாம் இங்கிலாந்துதேசத்துச் சிறைச்சாலைகளிலும், இன்னும் சில தேசங்களிலுள்ள சிறைச்சாலைகளிலும் மாத்திரம் இருக்கின்றன, இந்தியாதேசத்தில் இல்லை, என்று வருமோ?

டார்கள். ஸாரா மறுபடியும்வேண்டிக்கொண்டாள். பிற்பாடு உள்ளே விட்டார்கள். அவள், குற்றவாளியாகிய பெண்பிள்ளைமுன் சென்ற வுடன், அப்பெண்பிள்ளை "இங்கு ஏன் வந்தாய்?" என்று கோபத்துடன் கேட்டாள். ஸாரா தன் இரக்கத்தையும்,நல்ல எண்ணத்தையும் பற்றிச் சொன்னவுடன், அவளுக்குக் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று. தன் செய்கை கெட்டதென்று உணர்ந்து, வெட்கத்தையும் விசனத்தையும் அடைந்து, அதற்குப் பின்பாவது தான் நல்லவழியில்நடப்பதற்கு உதவிசெய்யும் பொருட்டு ஸாராவை வேண்டிக்கொண்டாள். அந்தோ! எத்தனை ஆத்துமாக்கள் நல்லபுத்தி சொல்வாரின்றியும், சன்மார்க்கத்தைக் காட்டுவாரின்றியும், இரக்கப் படுவாரின்றியும் குற்றக் கடலில் ஆழ்ந்து மூழ்கிப் போகின்றன.

அந்நாள்முதல் தன்மரணம் வரை ஸாரா மார்ட்டின் கிரேட்யார்மேளத் சிறைச்சாலையிலுள்ள குற்றவாளிகளை நல்லவழிக்குத்திருப்பும்பொருட்டு உழைத்தாள். தையல்வேலையினால் தினம் முக்கால் ரூபாய் சம்பாதித்தாள். வாரத்தில் ஒருநாள் வேலையை விட்டு விட்டுக் குற்றவாளிகளுக்காக உழைக்கவும், மேலும் எவ்வளவு நாள் முடியுமோ அவ்வளவு நாள் அவர்கள் பொருட்டுக்காலத்தைச்செலவழிக்கவும்தீர்மானம் செய்துகொண்டு, அவர்களுக்கு எழுதவாசிக்கச்சொல்லிக் கொடுக்கத்தொடங்கி, தான் அவர்களுக்குப் புஸ்தகங்களை வாசிப்பதுமன்றி, கதைகளும் சொல்லிவந்தாள்.

அன்றியும், ஞாயிற்றுக்கிழமைதோறும் ஒருமித்துக்கூடி, மதவிஷயமான புஸ்தகங்களை வாசித்து, சுவாமியைத் துதித்து வணங்கும்படிக்கு ஏற்பாடு செய்து, தானும் அவர்களுடன் சேர்ந்து தொழுது வந்தாள். முதலில் அநேகர் "அதனாற் பிரயோசனமில்லை" யென்று சொன்னார்கள். அதற்கு ஸாரா "அதனால் எனக்குப் பிரயோசனமிருக்கிறது; உங்களுக்கேன் இருக்கக்கூடாது? நான் அனுபவத்தினாற் பேசுகிறேன்; நீங்கள் அப்படிப் பேசவில்லை," என்றுசொன்னாள். தான் அவர்களுக்கு மேல்அதிகாரியாக இருக்கவேண்டுமென்று அவள் சிறிதும் விரும்பவில்லை. தானும் அவர்களுடன் உழைத்தாளே தவிர வேறில்லை: அவர்களுக்குப் பக்தி விஷயமாய்ப் பிரசங்கித்து வந்தாள். குற்றவாளிகள் கூட அவள் பிரசங்கங்களை ஆவலுடனும் கவனிப்புடனும் கேட்டு மகிழ்ந்தார்கள். அவள் பேரிலிருந்த அன்பினால், அவள் சொன்னபடி செய்தார்கள். கொடிய பாதகர்களும் அவளிடத்தில் தௌஷ்டகமாய்ப் பேசத் துணியவில்லை.

பிற்பாடு, தண்டனை யடைந்தவர்கள் சோம்பலாயிராமல் வேலை செய்யும்படி தூண்ட நினைத்தாள். இரண்டு கனவான்கள் அவள் முயற்சியைக் கண்டு மகிழ்ந்து இருபது ரூபாய் கொடுத்தார்கள். அதை ஆவலுடன் பெற்றுக்கொண்டு, குழந்தைகள் உடுப்புகளுக்காகும் துணிகளை அப்பணத்தைக் கொடுத்து வாங்கி, மாதிரி உடுப்புகள் தன் சிநேகிதரிடத்திலிருந்து இரவல்வாங்கி, அவ்வுடுப்புகளைப்போல் துணிகளைத் தைக்கும்படி தண்டனையடைந்த பெண்பிள்ளைகளுக்குச் சொன்னாள். அப்படித் தைக்கப்பட்ட உடுப்புகளைவிற்று, கிடைத்த இலாபத்தை, வேலை செய்த பெண்பிள்ளைகளுக்குக் கொடுத்தாள். இவ்விதமாய் மொத்தத்தில் ஐயாயிரம் ரூபாய்க்கு உடுப்புகள் தைத்து விற்கப்பட்டன. இதனாலுண்டான பயன் இருவகைப்பட்டது. குற்றவாளிகள் வீண்பொழுது போக்காமல் வேலைசெய்து கொண்டிருந்தார்கள். அன்றியும், அவர்கள் விடுதலைபெற்று வெளியே போகும்பொழுது, ஜீவனத்தின் பொருட்டு பழையகுற்றங்களைச்செய்யும்படி நேரிடாமல், அடைபட்டிருந்த காலத்திற்செய்த வேலைகளாற் கிடைத்த இலாபப்பொருளை முதலாகக்கொண்டு,நாணயமாய்ப் பாடுபட்டுப் பிழைப்பதற்கும் இடமாயிற்று.

ஸாராமார்ட்டின் இவ்விஷயத்தை வெகுமுக்கியமென்று நினைத்தாள். விடுதலை யடைந்தபின்னும், "குற்றவாளி" யென்று மற்றவர்களால் இகழப்பட்டு விலக்கப்படுதலினாலும்,ஒரு பக்கமும் வேலைகிடையாததினாலும்,தரித்திரத்தின் சகிக்கமுடியாக்கொடுமையினாலும், மறுபடியும் குற்றத்தையே செய்தாயினும் பிழைக்க விரும்புபவர் அநேகர். இப்படிப்பட்டவர்களுக்கு ஸாரா பலவிதமாய் உதவிசெய்தாள். மற்றவர்களிடத்திற் சொல்லி அவர்களுக்கு வேலை ஏற்படுத்துவித்தாள்; அவர்களுக்குப் பழைய வேலைகளை வாங்கிக்கொடுத்தாள்; அவர்களுக்கு முதலில் வேண்டிய கலப்பை, மண்வெட்டி, கோடரி முதலிய ஆயுதங்கள் வாங்கும்பொருட்டு, கொஞ்சம் பணமும் தன் கையிலிருந்து கொடுத்தாள்.

பொறுமையுடன் அநேக வருஷங்களுக்கு உழைத்தபின், அவள் கீர்த்தியெங்கும் பரவிற்று. தன் பாட்டியார் மரணத்துக்குப்பின், அவள் கிராமத்தை விட்டுவிட்டு, கிரேட்யார்மேளத்பட்டணத்தில் இரண்டு அறைகளை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு, அங்கேயிருந்தாள்.தன் பாட்டியார் விட்டுப்போன சொற்பவரும்படி தன் செலவுக்குப் போதாமற்போனாலும், தன் கொள்கையின் பேரிலுள்ள ஆசைப்பெருக்கால் தையல்வேலையை விட்டுவிட்டாள். கனவான்களனுப்பின கொடைப் பணங்களில், தன்சொந்தச் செலவுக்கென்று குறிப்பிட்டவையை மாத்திரம் தான் எடுத்துக்கொண்டு; மற்றவை யாவற்றையும் குற்றவாளிகளை நல்வழிக்குக்கொண்டுவருவதிலேயே செலவிட்டாள். அப்பட்டணத்தார் நன்றி யறிதலுடன்

அவளுக்குக் கொடுப்பதாகச் சொன்ன சம்பளத்தைத் தான் பெற்றுக்கொண்டால், குற்றவாளிகள் தன்னைக் கூலிக்காரியாக நினைத்து, சிறைச்சாலை அதிகாரிகளுடன் சேர்த்து, தனக்குப்பயந்து, அன்பை மறந்து விடுவார்களென் றெண்ணி, மறுத்துவிட்டாள். ‘சம்பளத்தை வாங்கிக்கொண்டு என்னமாய் முடிகிறது என்றுபார்’ என்றோருக்கு, “நான் எதற்காக ஜீவிக்கிறேனோ அதற்குத் தீங்கு விளைக்கக் கூடிய சோதனை செய்வது, கத்தியின் கூர்மையைச் சோதிக்கும்பொருட்டு குழந்தையின் கழுத்தில் வைப்பதுபோலாகும்; எனக்குக்குறையொன்றுமில்லை” என்று பதிற்சொன்னாள்.

அடுத்த வருஷத்தில் அவள் வியாதிகளால் துன்பப்படுத்தப் பட்டாள். அப்பட்டணத்தார் சம்பளமாகவின்றி தங்களுக்குப் பேருதவி செய்தவளுக்கு இனாமாக, வருஷத்திற்கு 150 ரூபாய் கொடுக்கத் தீர்மானித்தார்கள். அவள் அதற்குப்பின் வெகுநாள் ஜீவிக்கவில்லை. அப்படியிருந்தும், தான் சாவதற்குச் சிலமாதங்களுக்கு முன் வரையும் தன் உழைப்பை நிறுத்தவில்லை. அவள் சாவதற்குச் சற்றுநேரத்துக்கு முன் “சுவாமிக்கு வந்தனம்! சுவாமிக்கு வந்தனம்!” என்று இருமுறைசொன்னாள். அவளைஅவள் பிறந்த கேயிஸ்டர் கிராமத்திற் புதைத்தார்கள். கிரேட்யார் மௌத்பட்டணத்தார் அவள்பெயரைநிலைநிறுத்தும் பொருட்டுத் தங்கள் வேதக்கோவிலில் அவள் ஞாபகசின்னமாக ஓர் ஏற்பாடு செய்தார்கள். “பொருட்செல்வம்” நிறைந்த தனவான்கள் அநேகர் புகழின்றிப் பெயரின்றி மாண்டு போயிருக்கிறார்கள். “அருட்செல்வம்” நிறைந்த ஸாரா மாரட்டின் என்னும் ஏழைத் தையற்காரியின் பெயர் எங்கும் புகழப்படுகின்றது.

பணமும் சவகாசமுமின்றி,மனவிருப்பத்துடனும் பொறுமையுடனுஞ் செய்யப்படும் காரியங்கள் ‘பல துளி பெருவெள்ளம்’ ஆய்ப் பெருகுகின்றன. பொறுமை யிருந்தால் சிற்றுளியைக்கொண்டு பெரிய மலைகளையும் பெயர்த்து விடலாம்.

“மெய்*வருத்தம்பாரார்,பசிநோக்கார்,கண் துஞ்சார்†
எவ்வெவர் தீமையுமேற் கொள்ளார்,—செவ்வி
அருமையும்பாரார், அவமதிப்புங் கொள்ளார்,
கருமமே கண்ணாயினார்”

பேரேரி.

## சாவித்திரி சரித்திரம்.

——o——

### முதலாவது அதிகாரம்.

என்பிறப்பையும் குழந்தைப்பருவத்தையும் பற்றி நான் பிற்பாடு கேள்வியுற்றவைவையைத்தான் கூறக் கூடும். அவையென்னவெனில், நான் திருநெல்வேலி ஜில்லாவில் கோவிந்தப்பபுரமென்னும்கிராமத்தில் சுப்பய்யருக்கும் இலக்ஷ்மியம்மாளுக்கும்முதற் புத்திரியாகவும்இரண்டாவதுகுழந்தையாகவும் பிறந்தேன். நான் பிறப்பதற்கு ஏழு வருஷங்களுக்கு முன்பாக என் தமையனாகிய கோபாலன் பிறந்தான். அவன் முதற்குமாரனானதினாலும், அவர்களுடைய கலியாணத்துக்கு அநேக வருஷங்களுக்குப் பிற்பாடு ஜனித்ததினாலும், என்தாய்தந்தையர் கோபாலனை வெகு அருமைபாராட்டிவளர்த்து வந்தார்கள். முதற் புத்திரியாகிய நான் பிறந்தவுடன் அவர்கள் ஆனந்தத்தையடைந்து சாவித்திரி யென்னும் என் பாட்டியாரின் பெயரை எனக்கிட்டு, அப்பாட்டியாரைப் போல் மிக்க செல்வத்தில் வெகுநாள் வாழும்படியென்னை ஆசீர்வதித்ததுமன்றி, என்னை என் மாமனாகிய சுந்தரமய்யரின் புத்திரன் கிருஷ்ணனுக்கு விவாகம் செய்து கொடுப்பதாகவும்தீர்மானஞ்செய்து விட்டார்கள். அந்தோ! தாயாரின்னா ரென்றறியாப் பெண்ணுக்கு மாப்பிள்ளை தயாராயிருந்தான்.

என் குழந்தைப் பருவத்தைப்பற்றி நினைத்துப் பார்க்கும் பொழுது, எனக்கு முதல் முதல் ஞாபகத்துக்கு வருகிறது துக்கமானதாகவேயிருக்கிறது. என் மூன்றாவது வயதில் என் தாயார் இறந்து போய்விட்டாள். அவள் குணத்தைப்பற்றிக்கேள்விதானேயொழிய நானறியேன். இவ்வளவு வருஷங்களுக்குப் பின் நினைத்துப்பார்க்கும் பொழுது, அவள் பிரேதத்தை மயானத்துக்குத் தூக்கிக்கொண்டு போகையில் நான் தூக்குபவர்களின் காலைக்கட்டிக்கொண்டு அழுததும், என் தகப்பனார் கண்ணீர்பெருக, அவள் ஊருக்குப்போவதாயும், எனக்குப் பிரியமாயுள்ள பக்ஷணங்கள் வாங்கிக்கொண்டு சீக்கிரம் வந்து விடுவாளென்றும் சொல்லி, என் கண்ணீரைத் துடைத்து, எனக்கு வாழைப்பழம் வாங்கிக்கொடுக்கும்படி ஒருத்தியிடத்து விட்டு விட்டுப் போனதும் ஞாபகத்துக்கு வருகின்றன. நான் அவள் வரவை யெதிர்பார்த்து மயானத்துக்குப் போகிற வழியிலுள்ள ஆலமரத்தடியில் அடிக்கடி போயுட்கார்ந்து கொண்டிருப்பேனாம். பிற்பாடு பிறர் சொல்வதைக்கேட்டு நானும் “அம்மா செத்துப்போய்விட்டாள்” என்று சொல்லத்தொடங்கி விட்டேன். அவ்வயதிலேயே தாயாரை யிழந்தமையால் நான் பட்டகஷ்டங்களைப் பற்றிநினைக்கையில் என்மனம் பதைபதைக்கின்றது.

என் தாயார் இறக்கும்பொழுது என் தகப்பனாருக்கு ஐம்பதுவயது. அவர் பதினெட்டு வயதுள்ளவாலிபராயிருக்கும் பொழுது நான்கு வயதுள்ள ஒரு பெண்ணை விவாகஞ் செய்து கொண்டாராம். அப்பெண் பத்தாவது வயதில் வைசூரியினாலிறந்து போய்விட்டாளாம். பிற்பாடு அவர் என்தாயாரை

* உடம்பு. † தூங்கார்.

மணம்புரிந்து கொண்டாராம். அவர்களிருவரும் மிகப் பிரியமுள்ளவர்களாயிருந்ததாக எங்கள் பந்துக்கள் சொல்வதுண்டு.

என் தாயாரிறந்த மறுவருஷத்தில் அவர் மற்றொரு பெண்ணைக்கலியாணம் செய்துகொண்டார். அவ்விவாகத்தைப்பற்றி என்ஞாபகத்திலிருந்தும், பிறர் சொல்வதிலிருந்தும் விவரித்துக் கூறுகிறேன். என் தமையனாகிய கோபாலனுக்கு விவாகம்செய்யவேணுமென்று தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு பெண்ணை ஒப்பந்தஞ்செய்தார்கள். அப்பெண்ணின் தாய் தந்தையர்கள், தாங்கள் பத்து வருஷங்களாகப்பேணி வளர்த்ததற்குக் கூலி கிடைக்கக் காலம் வந்து விட்டதென்று நினைத்து, நகைகளும் பணமுமாக ஆயிர ரூபாய் கொடுத்துவிட்டால் தங்கள் பெண்ணை விற்றுவிடுவதாகச் சொன்னார்கள். என் தகப்பனார் அதற்குச் சம்மதித்து, முகூர்த்தம் வைத்தபின், தனக்கானால், பெண்விலையென்ன வென்று கேட்க, அவர்கள் சமயத்தைத் தப்பவிடக் கூடாதென்றெண்ணி, விசனத்தை யடைந்த தங்கள் பெண் மனதைத்தேற்றித் தங்களுக்கு இரண்டாயிர ரூபாய் கொடுத்து விடவேண்டுமென்றும், தங்கள்பெண் பெயருக்கு அவ்வளவுவிலையுள்ள நிலங்களையெழுதி வைத்துவிடவேண்டுமென்றும் சொல்ல, அப்படியே அதே முகூர்த்தத்தில் மருமகளாகவிருந்தவள் மனைவியாய்விட்டாள். இதைச்சொல்லும்பொழுது விசனமும் வெட்கமும் பொறுக்கமுடியவில்லை. இப்படிப்பட்ட விவாகங்களைத்தடுக்க இதனாலுண்டான தீங்குகளைச்சொன்னாற் போதுமல்லவா?

அதே வருஷத்தில் எனக்கும் என் தமையனுக்கும் கலியாணம் செய்து விடுவதாக யோசித்து, அவனுக்கு வேறொரு பெண்ணைத்திட்டஞ் செய்து, முகூர்த்ததினத்தைக் குறித்தானபின், கலியாணத்துக்கு வேண்டிய முயற்சிகளெல்லாஞ்செய்துகொண்டிருக்கையில், என் கணவனாக நியமிக்கப்பட்டிருந்த கிருஷ்ணன் என்பவன் ஆற்றில் நீந்தி விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது திடீரென்று வந்தவெள்ளத்தாலிழுத்துக்கொண்டு போகப்பட்டு இறந்ததாகக்கடிதம் வந்தது. எனக்கு அதைப்பற்றி நினைக்கும் பொழுதெல்லாம் மனம் பதறுகிறது. அம்மரணம் ஒரு வாரத்துக்குப்பின் நேரிட்டிருந்தால், என் கதியென்னமாய்முடிந்திருக்கும்! என் வாழ்நாளெல்லாம் கண்ணீரும் கம்பலையுமாய்க்கழிப்பதிற் சுகமென்ன? ஒரு குற்றமுஞ் செய்யாத குழந்தைக்கு அவ்விதியையுண்டுபண்ணினவர்களுக்கு எக்கதியமையும்? இதெல்லாம் அறிந்திருந்தும் குழந்தைப்பருவத்திலேயே கலியாணம் செய்தல் புத்தித்தாழ்வன்றோ?

கலியாணம் நடக்கவில்லை. கோபாலனும் திருநெல்வேலிக்குப் படிக்கப்போய்விட்டான்.

எனக்கு ஆறுவயதாகும்பொழுது என்சிறியதாயாராகிய தஞ்சாவூர்ப்பெண் எங்கள் வீட்டுக்கு வந்தாள். அவளுக்கு அப்பொழுது பதின்மூன்றுவயது. அவள் அழகுள்ள பெண்; தணிந்த விலையுள்ள சீலைகள் கட்டிக்கொள்ளமாட்டாள். தன்னைச் சிங்காரஞ் செய்துகொள்வதில் வெகு விருப்பமுடையவள். நடையுடைபாவனைகளெல்லாம் புதுமாதிரியாகவே யிருந்தன. அவளுக்கு எழுத வாசிக்கத்தெரியும். வந்து சிலநாள்களுக்குள் அவள் குணம் வெளிப்பட்டது. தானே வீட்டில் ஏகாந்தமாய் ஆளவேண்டுமென்ற எண்ணத்துடன், என் தாய்இறந்தநாள்முதல் வீட்டுவேலைகளைப் பார்த்துக்கொண்டு என்னை அன்புடன்வளர்த்துவந்த என் அத்தையைப்பற்றித், தன் புருஷனிடத்திற் கோட்சொல்லத்தொடங்கி, சிலநாள்களில் அவளைத் துரத்திவிட்டாள். அப்புண்ணியவதி வெகு விசனத்துடன், நான் அழுவதைக்காணப்பிரியமின்றி, வெளியே விளையாடப்போயிருக்கும் பொழுது, தன்னூருக்குப்போய்விட்டாள். நான் வீட்டுக்கு வந்தவுடன் “அத்தையம்மாள் எங்கே?” என்றுகேட்டேன். அதற்கு என்சிறுதாயாகியசெங்கமலம் “அத்தையுமில்லை, பாட்டியுமில்லை. முண்டையொழிந்தாள். சனியன் தொலைந்தது” என்றாள். நான் கோவென்றழுதேன். அதற்கு அவள் “என்காலின்கீழ் முட்டாதே. எங்கேயாவது ஒழி.” என்று சொல்லிக்கொண்டே பிடித்திழுத்து முதுகிலடித்து வெளியே தள்ளிவிட்டாள். நான் தெருவில் விம்மி விம்மி யழுதுகொண்டு நின்றேன். அப்பொழுது என் தகப்பனார் வந்தார். அவர் ஒன்றும் கேட்க வில்லை. திரும்பிக் கூடப்பார்க்கவில்லை. என் துக்கம் அதிகரித்தது. அப்பொழுது தான் நான் அனாதை யென்றறிந்தேன். “அம்மா செத்துப்போனாள்” என்பதின் பொருள் அப்பொழுது தான் தெரிந்தது. குளத்திற் போய் விழுந்து இறக்கலாமென்று நினைத்தேன். ‘ஆனால் தவளை கடிக்குமே. கிணத்திற் போய் விழுந்துவிடுவோமென்றால் ஆமை கடிக்குமே. ஒரு விஷயமும் தெரியாது; என்ன செய்கிறது! இவ்வித யோசனைகளில் அழுகை மாறிவிட்டது. பிற்பாடு என்தோழியாகிய சேஷி தம்பிக்கு வைசூரிகண்டிருந்ததனால் அவள் வீட்டுக்குப் போகக்கூடாதென்று என் அத்தையம்மாள் சொல்லியிருந்தது ஞாபகத்துக்கு வந்தது. வைசூரியினாலிறக்கலாமென்றுநினைத்து அங்கேபோகப்புறப்பட்டேன். சேஷி வீட்டு வாசலிற் போனவுடன் வேப்பிலைகள் சிதறிக்கிடப்பதைக்கண்டுபயந்து திரும்பிவிட்டேன். சாயங்காலம் சாப்பாட்டுவேளை வந்தவுடன், பசிமுன்னிழுக்க, வெட்கம் பின்னிழுக்க, மெள்ள மெள்ள வீட்டருகே சென்றேன். தெருத்திண்ணையில் வீற்றிருந்த என் தகப்பனார், “சாவித்திரி! உள்ளேபோய்ச் சாப்பிடு” என்றார். நான் தலையைக் கவிழ்ந்து கொண்டே வீட்டுக்குட் சென்றேன். உடனே செங்கம

லம் என்ற என் சிறுதாயார் "எடுத்துப்போட்டுக் கொண்டு தின்னு," என்றாள். என்கண்களிற் கண்ணீர் தளும்பிற்று. ஒன்றுஞ் சொல்லாமல் சோற்றுப் பானையிலிருந்து எடுத்துப் போட்டுக்கொண்டு சாப்பிட்டபின், எச்சிலைச்சுத்தி செய்து விட்டு திகைத்து நின்றேன். பிற்பாடு செங்கமலம்கோபத்துடன்சொன்னதாவது:—

"வயிற்றை நிரப்பிக்கொண்டு மண்ணுருப்போல் நிற்கின்றாயே! சும்மா கள்ளக்காளைபோல் திரியநினைக்கிறாயோ? அது நடவாது. குடத்தை யெடுத்துக் கொண்டு போய் வாய்க்காலிலிருந்து தண்ணீர் மொண்டுவா." என்றாள்.

நான் அதுவரை செல்வப் பெண்ணாகவே வளர்ந்தேன். தாயில்லாப் பெண்ணாதலால் யாவரும் தாய் போலிருந்தார்கள். வேலை செய்தறியேன். ஆயினும், செங்கமலத்தைக் கோபமூட்டப் பயந்து குடத்தை யெடுத்துக்கொண்டு வாய்க்காலுக்குச் சென்றேன். தண்ணீர் மொண்டானவுடன் குடத்தைத் தூக்கமுடியவில்லை. ஓர் வயதான பெண்பிள்ளை யிரக்கப்பட்டுக் குடத்தை யிடுப்பில் தூக்கிவைத்தாள். நான் அடிமேலடிவைத்து வருத்தத்துடன் நடந்துவரும்பொழுது, அத்தையம்மாளைப்பற்றி நினைக்கக் குடம் கைதவறிக் கீழே விழுந்து விட்டது. திரும்பவும் வாய்க்காலுக்குச் சென்று நீர் மொண்டுகொண்டு வீடு வந்து சேர்ந்தேன். செங்கமலம் "இவ்வளவு நேரமென்ன?" என்று வினவ, நான் நடந்ததைச் சொன்னேன். உடனே யவள் ஆவலுடன் குடத்தைத் திருப்பிப் பார்க்க அது அடியில் அதுங்கியிருந்தது. நானதைப் பார்க்கவில்லை. அதற்காக அவளென்னை யடித்துத் திட்டினாள். நான் மனதிற்குள் பதில் வைது கொண்டேனே யொழிய ஒன்றுஞ் சொல்லவில்லை. அன்று முதல் வர வர அடிகளும் குட்டுகளும் கிள்ளுகளும் வசவுகளும் சகசமாய் விட்டன. அவையில்லா நாள் அரிதாய்விட்டது. நான் கஷ்டப்பட்டதோடு தீர்ந்து விட்டதா? செங்கமலத்தால் என் தகப்பனார் பட்ட கஷ்டத்தை வேறொரு புதிய அதிகாரத்தில் தான் கூறவேண்டும்.

சாவித்திரி.

## தமிழ்ப்பாஷை.

### தமிழ்ப்பாஷை யிலுள்ள இலக்கியங்கள்.

(த. சரவண முத்துப்பிள்ளை பி. எ. அவர்கள் இயற்றியது.)

தமிழ்ப் பாஷையினாதி யாவர்க்குந் தெரியாதது போலவே தமிழிலே முதன்முதலெழுதப்பட்ட நூல்கள் யாவை, அவை யெவராலெழுதப்பட்டன, எக்காலத் தெழுதப்பட்டன இவையாவும் யாவர்க்கும் தெரிவரிதா யிருக்கின்றது. தேச சரித்திரங்களில்லாமையானும், முற்காலத்தைய நூல்களில்லாமையானும், பிற்காலத்து நூலாசிரியரும் முற்காலத்தைப்பற்றி யெழுதாமையானும், தமிழ்ப் பாஷையின் பூர்வசரித்திரம் பேரிருட்டா யிருக்கின்றது.

**அகத்தியம்.** அகத்திய ரியற்றிய அகத்தியம் என்னும் பேரிலக்கணமே தமிழின் முன்முத லெழுதப்பட்ட நூலென்பர் அனேகர். அகத்தியம் பன்னீராயிரஞ் சூத்திரங்கொண்ட தென்றும், இயல், இசை, நாடகம் என்னும் முத் தமிழ்க்கு மிலக்கணங் கூறிய தென்றுங் கூறுகின்றனர். தமிழ்ப்பாஷை தொடங்கியவுடன் ஒரு பேரிலக்கணந் தமிழிலெழுதிய விந்தை நம் பண்டிதர்மார்க்கே புலப்படும். யாதொரு சிறு காரியத்திற்குஞ் சூத்திரமெடுத்துக் காட்டும் பண்டிதர் வித்துவான்கள் முதலியோர் "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலில்" என்னுஞ் சிறுநன்னூற் சூத்திரத்தை மறந்து தமிழிலிலக்கிய முண்டுபடுதற்கு முன்னேயே அகத்தியர் தமிழிலே யொரு பேரிலக்கண மெழுதினாரெனக் கூறலும் ஒருபெரும் விந்தையே. ஆயினுமென்? சப்தசமுத்திரத்தையுமோருழுந்தளவாக்கி யுள்ளங்கையில்வைத் தாசமனஞ் செய்தருளிய அகத்தியர்க்கு இலக்கியமின்றி யிலக்கணமெழுதல் ஒரு பெருங்காரியமோ வெனச் சமாதானங்கூறலும் பண்டிதர் பாண்டியத்திற் கெட்டியதன்றி சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய நமக்கும்புலப்படும் பொருளோ?

**தொல் காப்பியம்.** அகத்திய ரியற்றியதாகக் கூறப்படும் பன்னீராயிரம் சூத்திரங்களுட் தொல்காப்பியராலெடுத் தாளப்பட்ட சிலவும், உரையா சிரியர்களா லெடுத்தாளப்பட்ட சிலவுந் தவிர மற்றவையாவு மிறந்து போயினவாகத் தோற்று கின்றது. இவ் வகத்தியர்க்கு தொல்காப்பியன், அதங் கோட்டாசான், துராலிங்கன், செம்பூட் சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம் பாரன் கழாரம்பன், அவிநயன், காக்கைபாடினியன், நற்றத்தன், வாமனன் எனப் பன்னிரு மாணாக்கரிருந்ததாகவும், அவர் தம்பேரைக்கொண்டு வெவ்வேறு பன்னிரண் டிலக்கணங்களும், அனைவருமொருங்கு சேர்ந்து புறப்பொருட் பன்னிரு படலமென ஒருநூலு மியற்றினதாகக் கூறுவர், அவற்றுட் தொல்காப்பியமொன்றே நமக்குக் கிடைத்தது. தொல்காப்பியம் தற்காலத்துள்ள மற்றைய தமிழ் நூல்களைப் பார்க்கிலும் முந்தியதாகத் தோற்றுகின்றது. இதுவே தமிழிற்குச் சிறந்த இலக்கணம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்னு மைந்தையும் பற்றிச் சொல்லும் இந்நூலில் வடமொழிப்

பதங்க ளருமையாயிருத்தலே இது முதியதென்ப தற்கோ ரத்தாட்சியாகும். இதற்கு இளம்பூரணர், கல்லாடர், பேராசியர், சேனவரையர், நச்சினர்க்கினியர்என ஐவர்உரைசெய்தன ரெனக்கூறல் வழக்கம். ஆயின் இளம்பூரணருரையில் எழுத்ததிகாரமும் சேனவரையருரையில் சொல்லதிகாரமுமே வழங்குகின்றன. கல்லாடருரையும் பேராசிரியருரையுங் காணேம். நச்சினர்க்கினியருரையே சகலத்திற்கும் பிந்தியதும், தொல்காப்பிய முழுவதற்கு முள்ளதும், நச்சினர்க்கினிய ருரைவல்லபம் கூறிற் பெருகுமாதலின்விட்டனன். அவர்பேரோ யவர்குணத்தை நன்று விரிக்கின்றது. இவரது உரையையு மிறந்துபோகாதபடி காத்து நமக்கச்சிட்டளித்த ஸ்ரீமத் - சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கட்குத் தமிழர்யாவரும் என்றும் நன்றியறிவுடையோரா யிருத்தல்வேண்டும். இவராலேயே தொல்காப்பியமுஞ்சேனவரையமுமச்சிடப்பட்டது. தொல்காப்பிய மிக்காலத் தெழுதப்பட்டதெனக் கூறமுடியாது. ஆயிரம் வருடங்கட்கு முன்னென்பார் சிலர். மூவாயிரம் வருடங்கட்கு முன்னென்பார் சிலர். இருபதினாயிரம் வருடங்கட்கு முன்னென்பாரு முளர்.

**முந்தமிழ்ச்சங்க மிருந்த காலம்.**

இக் காலத்திலேயே முத்தமிழ்ச்சங்க மிருந்ததாகக் கூறுகின்றனர். முதற்சங்கங் கடல் கொள்ளப்பட்ட மதுரையிலிருந்த தெனவும், சங்கமிருந்தார் ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்பதின்மர் எனவும், நாலா யிரத்து நானூற்று நாற்பத் தொன்பதின்மர் பாடினு ரெனவும், பாடப்பட்டவை வேத்துணையோர் பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையுமென இத்தொடக்கத்தன வெனவும், இடைச்சங்கம் கபாடபுரத்தி லிருந்ததெனவும், சங்கமிருந்தார் ஐஞ்ஞூற்றொன்பதின்ம ரெனவும், மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினுரெனவும், பாடப்பட்டவை கலியுங்குருகும் வெண்டாளியும், வியாழமாலை யகவலுமென இத்தொடக்கத்தன எனவும், கடைச்சங்கம் வடமதுரையிலிருந்ததெனவும், சங்கமிருந்தார் நாற்பத்தொன்பதின்மரெனவும், நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினுரெனவும், பாடப்பட்டவை எட்டுத் தொகையும், பேரிசையுஞ், சிற்றிசையுமென் றித்தொடக்கத்தன வெனவும் வித்துவான்கள் கூறுவர். ஆயின் உள்ளதையுள்ளபடி கூறல் தமிழ்ப்பண்டிதர் குணமன்மையின் உண்மையும் அவர்வாயில் வரும்பொழுது உண்மை நிறம்மாறிப் பொய்யாகின்றது. ஆகவே சங்கங்களைப்பற்றிக் கூறுவனவற்றுள் உண்மை யெவ்வளவு, பொய்புளுகு எவ்வளவெனக் கண்டு பிடிக்கத்தொடங்கல் பகீரதப் பிரயத்தனமாகும். இச்சங்கங்களுள் ஒவ்வொன்று பல்லாயிர வருடமிருந்ததாகவும், இச்சங்கங்களில் சிவன், சுப்பிரமணியர் முதலிய கடவுளர் சங்கத்தவராய் வீற்றிருந்தன ரெனவும், இச்சங்கங்கட்குத் தெய்வீகமான சங்கப்பலகை யொன்றிருந் ததாகவும், இவ்வித பல கதைகளைக் கூறுவதனுல் உள்ள உண்மையும் மறைந்துபோகின்றது. கடைச்சங்கத்தி லியற்றப்பட்டனவாகக் கூறப்பட்டவற்றுட் சிலவே தற்காலத்து வழங்கும் நூல்களுட் பழையன.

**பஞ்ச காவியங்கள்.**

இக்காலத்து நூல்களிற் சிறந்த காவியம் ஐந்து! சிந்தாமணி, சிலப் பதிகாரம், மணிமேகலை குண்டலகேசி, வளையாபதி யென்பன. இவற்றுள் சிந்தாமணியும் சிலப்பதிகாரத்தி லொருபாகமுமே அச்சிடப்பட் டிருக்கின்றன.*திருத்தக்கதேவரியற்றியசிந்தாமணி பதின்மூன்றிலம்பகத்தில் சீவகனது கதையைக் கூறுவது, நச்சினர்க்கினியரா லுரை செய்யப்பட்டது. சொல்லழகும் பொருளழகும் நிறைந்துள்ளது. ஆங்கிலேயராலும் மிகவுஞ் சிறந்ததெனக் கணிக்கப்பட்டது. தமிழிற்சிறந்தகாவியங்களுள் முக்கியமானதொன்று. மூவாயிரத்துநூற்று நாற்பத்தைந்து செய்யுட்கொண்டது. கற்கக்கற்க இன்பம் பயப்பது. சேரர்குலத்துதித்த இளங்கோவடிகளியற்றிய சிலப்பதிகாரம் கோவலன் கதையைக் கூறுவது. புகார்காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக்காண்டம் என மூன்று பிரிவுள்ளது. கற்றேர் சிலராற் சிந்தாமணியினின்றுஞ் சிறந்ததெனக் கூறப்பட்டது. புகார்காண்டமே அச்சிடப்பட்டது. * மணிமேகலை சிலரிடத்துக் கையெழுத்துப் பிரதியாயிருக்கின்றது. வளையாபதி, குண்டலகேசி யிரண்டும் இருக்கின்றனவோ இறந்துபட்டனவோ தெரியாது. இவையன்றிச் சமண ரியற்றிய யசோதாகாவியம், உதயணன் காதை, நாககுமாரகாவியம், சூளாமணி,நீலகேசியெனச் சில சிறுகாவியங்களுள. இவற்றுள் சூளாமணி ஸ்ரீமத். சி. வை. தாமோதரம்பிள்ளை யவர்களால் அச்சிடப்பட்டிருக்கின்றது. சொற்சுவை நிறைந்துள்ளது. தற்காலத்துச் சிறு கிரந்தங்களுள் அதற்குச் சமானமானது ஒன்றுங்காணேம். மற்றவற்றுள் யசோதரகாவியம் முன்னெருவரா லச்சிடப்பட்டிருக்கின்றது. மற்றவை யச்சிடப்படவில்லை.

**இக்காலத்து மற்ற காவியங்கள்.**

இவை யன்றி, நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு, புறநானூறு என எட்டுத் தொகைகளுள்

* [இவை யிரண்டும் கும்பகோணம் காலேஜ் ம-ா-ா-ஸ்ரீ, வே. சாமிநாதய்யர் அவர்களால் பிழையறப் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. சிந்தாமணி வெளியாகி இரண்டு வருஷகாலமாகிறது. சிலப்பதிகாரம் அச்சிலிருக்கிறது. பெரும்பாலும் அச்சிட்டாய்விட்டது. வெகு சீக்கிரத்தில் வெளிபிடத்தயாராகும்.—ப-ர்.]

ளன. இவற்றுள் நல்லந்துவனார் கலித்தொகை யொன்றுமே யச்சிடப்பட்டிருக்கின்றது. 'கற்றறிந் தோரேத்துங் கலி' யென்னும்பொழுதே யதன்சிறப் புத் தோற்றுகின்றது. மற்றத் தொகைகளுட் சில கையெழுத்துப் பிரதியாக விருக்கிறதாகக்கேள்வி. சில விறந்தனபோலும். இவையுமன்றி, திருமுருகாற் றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்துப்பா ட்டுகளுண்டு. இவையாவும் ஒன்றாய் நச்சினார்க்கி னியருரையுடன் ஸ்ரீமான் வே. சாமிநாதையரவர் களா லச்சிடப்பட்டிருக்கின்றன. சிந்தாமணிக் குயிர ளித்த புண்ணியவாளனு மிவரே. தமிழிலுள்ள சிறு பாடல்களிற் சிறந்தவை யிவைபத்துமே. இவை யன்றி, நாலடி, நான்மணி முதலிய பதினெண் கீழ்க் கணக்கெனக் கூறப்படும் பதினெட்டும் சங்கத்திற்குச் சேர்ந்ததாகவே கூறுவர். இவற்றுட் பல நீதிநூல் களே. கல்லாடரியற்றிய கல்லாடமென்னுஞ் சிறந்த நூலுமிக்காலத்திற்குச் சேர்ந்ததாகவே யிருக்கவேண் டும். அது அக்காலத்திலேயே பேர்பெற்ற நூலா யின், இக்காலத்ததன் மகிமையை யேன் சொல்ல வேண்டும். ஆனால் அதையாரு முபயோகிப்பதைக் காணோம்.

(இன்னும்வரும்.)

## தேகாப்பியாசம்,

ஓடுவதாலுண்டாகும் பயன்:— தேகாரோக்கியத் துக்கும் சரீரதிடத்துக்கும் ஆஸ்பதமானதேகாப்பியா சங்கள் எல்லாவற்றிலும் ஓடுவது மிகவும் எளிதும், விசேஷமும், சிலாக்கியமுமான தேகப்பயிற்சி யென் றுயாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஓடு வதைவழக்கமான தேகாப்பியாசமாகச்செய்து வருகி றவர்களுக்குஉருவழகும்,அசைவழகும்,மேனியழகும் தானேயுண்டாகும்.ஓடுவதினால் நரம்புகளுக்குப் போ துமான அசை வுண்டாகி அவை இறுகிப்பருத்து பல ப்படக்காரணமாகிறது; சுவாசத்தை வேகமாக உள் வாங்கி அடக்கிவிடவேண்டியிருப்பதால் சுவாசப்பை தாராளமாக அதன் தொழிலைச் செய்து அதுநன்றாக பலப்படவும், இரத்தத்தைச் சுத்திகரிக்கும் அதன் தொழிலை நன்றாகச் செய்யவும் இட முண்டாகச் செய்கிறது. அன்றி இரத்தாசயத்தி லிருந்து இரத்த ஓட்டம் வேகமாக ஓடவும், அதனால் இரத்தாசயமும் இரத்த நரம்புகளும் நன்றாக பலப்பட்டு தேகத்தி லுள்ள அசுத்தங்களைச் சீக்கிரத்தில்வெளிப்படுத்தவும் சக்தியுடையனவாகின்றன. அன்றி ஓடும்பொழுது தேகத்திலுள்ள உறுப்புகளெல்லாம் அததது அமைந் திருக்க வேண்டிய ஸ்தானத்தில் சரியாய் அமைந்தி ருக்க நேரிடுகிறது. தோள்கள் பின்னிட்டு மார்விரிகி றது. இடுப்பு மேலுடலைத் தாங்கி நிற்பதால் சிறுத்து பலப்படுகிறது. கால்கள் அவை அமைந்திருக்கவேண் டிய மாதிரியில் சரியாக அமைகின்றன.

பூர்வீகர்களான கிரேக்கர்களுக்குண்டாயிருந்த புஜ பல பராக்கிரமமும், அவர்கள் உடம்புக்கட்டழகும் அவர்கள் விடாது செய்துவந்த தேகாப்பியாசங்களா லும் அத்தேகாப்பியாசங்களில் ஓடுதல் அதிகவழக்க மாக விருந்ததாலுமே வந்ததென்பதற்கு சந்தேகமில் லை. இன்றைக்கும் அதிகமாகஓடியுழைக்கப்பழகும் மனிதன்தன் தேகத்தை அவ்வளவாக அசைக்காதவ னைவிடதேகக்கட்டில்அழகமைந்துசுறுசுறுப்பில்மிகு ந்தவனாகவிருப்பதைக்காணலாமே. இதற்குக்காசுப ணமொன்றும்செலவில்லையாலும் இதைஅப்பியசிப்ப தற்கவசியமானவெட்டை வெளிநிலத்துக்கு எங்கும் குறைவில்லையாலும் இதையாரும் அப்பியசிக்கலாம்.

ஓடுவதற்கு அடுத்தமேலான தேகாப்பியாசம் நடத் தலாம். ஓடுவதால் தேகத்துக்குண்டாகும் சுகிர்தம் இந்த அப்பியாசத்தாலும் கொஞ்சம் மட்டாக உண் டாகும். ஓடுவதற்குக் கூடாதவர்கள் காலை மாலைக ளில் நீண்டதூரம் நடை சவாரி போவது தேகா ரோக்கியத்துக்கு அனுகூலமாம்.

வளர்பிராயமான சிறுவர்களும், வாலிபப்பருவமு டையவர்களும் அவரவர் தேகமும் அவயவங்களும் கட்டிறுகி உறுதிப்பட்டு அழகாய் ஓங்கிவளர கருடி வித்தை கசரத்துவித்தைகள் செய்யப் பழகிவருவது மிகவும் நலமாம். இதற்கு சாதகமான சுதேச கச ரத்து வித்தைகள் பலவிருக்கின்றனவென்பது நாட் டுப்புறத்திலுள்ள நமது ஜனங்களுக்குத் தெரிந்தே யிருக்கும்.

இவையன்றி அங்கிலேயர் பழகும் கருடிவித்தை களும் அனேக மிருக்கின்றன. அவை யொவ்வொன் றும் குறித்த ஓர் அவயவம், மூட்டு,அல்லது நரம்பை வலிக்கச்செய்து பலப்படுத்தி உறுதியுண்டுபண்ணத் தக்கதாக விருக்கிறது. இவ்வித்தைகள் இப்பொ ழுது சாதாரணமாக இத்தேசத்துப் பாடசாலைக ளில் இதற்கென்றேற்பட்ட போதனாசிரியர்களால் மாணாக்கர்களுக்கு வலிகட்டாயமாய்க் கற்பிக்கப் பட்டுவருகின்றன. தேகாப்பியாசத்தின்முக்கியத்தை யும், தேகமனோசுகத்துக்கும்திடத்துக்கும் தேகாப்பி யாசம் வேண்டியதின் அவசியத்தையும் அறியாத நம்மனோர் இதை அனாவசியமென்று சொல்லி இதை ப்பற்றி அசிரத்தையாகவும் அருவருப்பாகவும் பேசு வதுண்டு. அது பிசகு. தெரியாமையால் அவர் கள் அப்படி பேசுகிறார்கள். பின்வருவதை வாசித்து யோசித்துப் பார்த்தால் அவர்கள் கொண்டது தப் பெண்ணமென்று விளங்கும்.

"வெகுகாலத்திற்குமுன் இருந்தோர் நிலைமையுத்தத்திற்கே இடம்கொடுத்து வந்ததினால் அவர்கள் கேவலம் மிருகப் பிராயமான தேக பலமானது மனோபலத்திலுஞ் சிறந்ததென்றெண்ணித் தேகாப்பியாசம் மாத்திரஞ் செய்துவந்தார்கள்:

தேகாப்பியாசந்தான் வித்தையின் உத்தேசம்என்றும், ஒன்றைப் பலமாய்த் தாக்கி எப்படிப்பட்ட உழைப்பிற்கும் பின் வாங்காதவனே வித்தையில் தேர்ந்தவன் என்றும் அவர்கள் எண்ணி யிருந்தார்கள்.

இப்படி யிருக்கையில் சூரரென்றும் கௌரவமுடையவர்களென்றும் பேர் பெற்ற சிற்சிலர் வாசிக்கத் தெரிந்திருந்ததினாலேயே பண்டிதர்களென்று எண்ணப்பட்டார்கள். மேலும் அவர்கள் கையெழுத்துப்போடத்தக்க அளவு எழுதப்பயின்றிருந்தால்எல்லாரும் அவர்களை மந்திரவாதிகளென்று சந்தேகப்படுவார்கள்.

நாகரிகம் விருத்தி ஆக ஆக படிப்பும் கலைக்கியானமும் மனிதனுடைய நிலைமையைத் தாழ்த்த மாட்டாவென்றும் தேகவலியுள்ள சூரனொருவன் படிப்பாளியாயுமிருந்தால் அதன் கௌரவம் அதிகரிக்க அது இடங்கொடுக்கிறதென்றும் மனிதர் புத்தியிற் பட்டது.

பொருமையும் கல்வி விருத்திக்கு ஒரு துணையாயிருந்தது. எப்படியென்றால், அக்காலத்தில் மடங்களிலுள்ள துறவிகள் மாத்திரம் கல்விமான்களாயிருந்ததினால் தேகபலமாத்திரம் உடையவராய்ப் புத்தி பலமில்லாத மற்றவர்களிடத்தில் அத்துறவிகளுக்குச் செல்வாக்கு அதிகரித்துவர இடமிருந்தது.

இப்படியே நாளாவட்டத்தில் அங்கிலேயர் புத்தி பெருகிப் பலப்பட்டது. மனமுயற்சியின் விருத்தியைத் தடுக்க முயன்றகாலம் போயிற்று.

பிறகு இம்மனமுயற்சி அதிகரித்து, இன்றுவரையில் அவ்வாறே யிருக்கின்றது.

குளிரானதேசத்தில் உஷ்ணம் குறையாமலிருக்கும்படிக் கண்ணாடிக் கூடமைத்து அதில் வெள்ளரிக்காயை முற்றுவிப்பதுபோல் இக்காலத்தில் குழந்தைப் பருவமுதல் மிகவருந்தி மனோவிருத்தி செய்துவருகிறார்கள், தேகத்தைப் பாதுகாக்காமல், அது தானே திடப்பட்டுமென்று விட்டுவிட்டு மனமுயற்சிலேயே கவலையுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

அந்தகரணங்களின்தொழில் பாவங்களைக்குறித்து இப்புஸ்தகத்திற் சொல்வது அவசியமன்று. மனித ஜன்மங்களில்தேகபோஷணைமுக்கியமானதென்றும் மனோ வியாபாரத்திற்குத் தேகசுகம் உடந்தையானதென்றும் ஜனங்களுக்கு வரவரத் தெரிகின்றன.

தேகசுகந் தப்பினால் மூளையும் தன்னிலை குலைகிறது. அதனால் மனோவியாபாரம் தடைப்படுகிறது. வியாதி உபத்திரவத்தால் புத்தியின் வலி குறைந்து, கற்பனாசக்தி ஒளிமங்குகிறது. பெரும்பாலும் சாரீர உழைப்பின்மையால் அஜீரணம் நேரிடுகிறது. ஒரு காலுண்டாகும் அஜீரணத்தால் ராஜ்யநஷ்டம் நேரிடவும் கூடும்; நேரிட்டதாயுஞ்சொல்லிருக்கிறது.

தேகமும் புத்தியும் நாம்பெற்ற பெருஞ்செல்வம்; அவைகளைச் சரியாய்க் கையாளுவது நமது 'கடமை' ஆகையால் அவ்விரண்டையும் சூசிமான அளவு நாம் பயிற்சி செய்யவேண்டுமென்று ஜனங்கள் இப்பொழுது அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள்; இது வெகு நல்லது.

சிறுவர்களுக்குக் கற்பிக்கும் வித்தைகளில் சிலம்பப் பயிற்சி வெகு சிறந்ததென்பது என்னுடைய கருத்தாகையால் மற்றப் பாடங்களோடு இதையும் கிரமமாய்க்கற்பித்து வருகிறேன். இச்சிலம்பப் பழக்கத்தால் தேகசுகம் அதிகரிப்பதும், மனவெழுச்சியுண்டாவதும் தவிர வேறொரு நன்மையுமுண்டு—கருடி பழகினவனுக்கு இடுக்கண் வேலைகளில் மனோதைரியம் குறைகிறதில்லை.

மற்றவர்களுக்குச் சிறிதேனும் பிடிப்பில்லாத விடத்தில் பழக்கத்தினாலே கருடி பழகினவன் கைகால்கள் கைக்குக் கையுறைபோலப்பலமாய்ப் பிடித்துக்கொள்ளுகின்றன. மற்றவர்கள் நாம் இறப்பது நிச்சயமென்று நினைக்குமிடத்தில் இவனுக்கோ கொஞ்சமேனும் பயமில்லை. தேகாப்பியாசத்தின் பிரயோசனம் இன்ன இன்னவென நாம் சந்தேகமறத் தெரிந்திருந்தும் நமது தேகத்தைக் கொஞ்சமேனும் பயிற்சிசெய்யாதிருத்தல் வெகு ஆச்சரியகரமாயிருக்கிறது. நம்மவர்களில் ஆயிரம் பேரில் ஒருவன்கூட எதையேனும் கையினால் பிடித்துத் தொங்கும்பொழுது காலைக் கையிருக்கும் இடத்திற்கு உயர்த்தச்சக்தியற்றவனாயிருக்கிறான். என்றாலும் அப்படிச் செய்கிறது கருடி வித்தையில் முதல் அப்பியாசமாம்.

அங்கிலேயர் கையிலும் காலிலும் வலியமைந்தவர்களாயினும் இடுப்பிலும் முதுகிலும் பலம் குறைந்தவர்கள். பழைய பிரதிமைகளில் வெகு அழகாய்த் தோன்றும் இடுப்பைச்சூழ்ந்திருக்கும் பலமான நரம்புகள் நமக்கு இல்லாதது போலத் தோன்றுகிறது.

இந்த நரம்புகள் பருத்திருப்பதினாலேயே இன்னான் கசரத்துப் பழகினவனென்று அங்கிலேயர் இடுப்பைப்பார்த்து நான் சொல்லமாட்டுவேன்.

ஒருவன் தேகவலியுள்ளவனாயிருப்பதற்கு நரம்பு அதிக புஷ்டி யடைந்திருக்க வேண்டுமென்பது அவசியம் அன்றென்றுநாம் அறியவேண்டும்.

கசரத்துப் பண்ணுகிறதினால் முதலில் நரம்புகள் பெருக்கின்றன, ஆயினும் சிலநாள் சென்றபின்பு நரம்புகள் சிறுத்து அழுந்திக் கம்பிபோலாகின்றன. ஏனெனில் நரம்பின் சந்துகளில் கொழுப்பு அதிகமாக ஏறுகிறதில்லை."

மேற்கண்டவை கருடிவித்தை பழகிப் பிள்ளைக ளுக்கு அவ்வித்தைகளைப் போதிப்பதில் கீர்த்தி பெற்ற ஒருவர்* எழுதியவாக்கியங்கள். தேகாபபியா சத்தின் முக்கியத்தையும் அவசியத்தையும் பறறி இவர் சொல்லியிருப்பதைவிட நாம் அதிகமாய்ச் சொல்லி வற்புறுத்த நிமித்தமில்லை.

## ஹிந்து மதத்தின் கட்டளைகள்.

### சுருதிஸ்மிருதிகளின்படி.

1. மெய்பேச வேண்டும்.
2. கடமைகளை சரியாய் நிறை வேற்றவேண்டும்.
3. அத்தியயனஞ் செய்ய வேண்டும்.
4. ஆசாரியருக்கு குருதக்ஷிணை கொடுக்க வேண்டும்.
5. அவரை கௌரவிக்க வேண்டும்.
6. மாதாவை கௌரவிக்க வேண்டும்.
7. பிதாவை கௌரவிக்க வேண்டும்.
8. அதிதியைப் பூஜிக்க வேண்டும்.
9. பெரியோர்களை மதிக்கவேண்டும்.
10. சிரத்தையோடு அல்லது எவ்விதமா யாவது கொடுக்க வேண்டும்.
11. நிர்த் துஷ்டமான நடத்தையோடு நடக்க வேண்டும். வேறுவிதமாய் நடக்கக் கூடாது.
12. ஆசாரியருடைய நடத்தையா யிருந்தபோதிலும் நிர்த்துஷ்டமா யிருக்கிறதைமட்டும் அனுசரிக்க வேண்டும். வேறு நடத்தையை அனுசரிக்கக் கூடாது.
13. சந்தேக விஷயத்தில் சாஸ்திரம் தெரிந்தவர்கள் எப்படி செய்கிறார்களோ அப்படி நடக்க வேண்டும்.
14. சத்தியத்தை விடவேண்டாம்.
15. தர்மத்தை விடவேண்டாம்.
16. க்ஷேமத்தை பால்மாரிக்கக்கூடாது.
17. பாக்கியத்தை பால்மாரிக்கக் கூடாது.
18. படிப்பையும் குருஉபதேசத்தையும் பால்மாரிக்கக் கூடாது.
19. தேவபிதிருக்களுடைய சேவையைப் பால்மாரிக்கக் கூடாது.
20. புரத்தியாருடையசொத்தை ஆசிக்கக்கூடாது.

### ஸ்ரீகீத சாஸ்திரப்படி.

21. பயபக்தியோடு பகவானை பூஜிக்கவேண்டும்.
22. தானஞ் செய்யவேண்டும்.
23. தபம் அதாவது ஆலோசனை செய்யவேண்டும்.
24. சாஸ்திரத்தின்படி நடக்கவேண்டும்.
25. பகவானை சரணம் அடையவேண்டும். அவர் உன்னை காப்பாற்றுவார்.
26. பகவானை நம்பினால் அவர் உம்முடைய யோக க்ஷேமத்தை வகிப்பார். அவர் இஷ்டம் நிறைவேறும்.

* George Forrest.

### ஸ்ரீபாகவதப்படி.

27. பகவான் சிருட்டித்தவர்களுக்கு சந்தோஷமானதும் ஹிதமானதுமான வற்றை செய்வதினாலே பகவானை பூஜிக்கவேண்டும்.
28. சத்தியத்தை பகரவவேண்டும்.உபதேசிக்க வேண்டும்.
29. சத்தியத்துடனும், தயையுடனும் எல்லோரையும் நடத்தவேண்டும்.
30. தபசோடும், சுசியோடும் இருக்க வேண்டும்.
31. பொறுமையுடன் நடக்க வேண்டும்.
32. விவேகத்துடன் நடக்க வேண்டும்.
33. சமம் அதாவது மனசை ஜயிக்க வேண்டும்.
34. தமம் அதாவது இந்திரியங்களை ஜயிக்க வேண்டும்.
35. அஹிம்ஸையுடன் நடக்க வேண்டும்.
36. பிர்ம சாரியத்துடன் நடக்க வேண்டும்.
37. தானபரனாகி யிருக்க வேண்டும்.
38. வித்தையை அப்பியஸித்துக் கொண்டிருக்க வேண்டும்.
39. மனோவாக்குக் காயங்கள் ஒரு வழிப்பட்டிருக்க வேண்டும்.
40. சந்துஷ்டனாக இருக்கவேண்டும்.
41. பெரியோர்களை சேவிக்கவேண்டும்.
42. பிரபஞ்ச விஷயத்தில் ஆசை யன்னியிலிருக்க வேண்டும்.
43. உபயோகமற்ற செய்கைகள் வீண் என்று அறியவேண்டும்.
41. மவுனமாக இருக்கவேண்டும்; அதாவது வீண் வார்த்தைகளைப் பேசக்கூடாது.
45. தன்னைத்தான் அறியவேண்டும்.
46. எல்லோருக்கும் கொடுத்துப்பிறகு தான் புசிக்கவேண்டும்.
47. தன்னைப்போலவும், தனக்குப்பெரியோர்களைப் போலவும் எல்லாரையும் பார்க்கவேண்டும்.
48. பகவான் குணகதைகளை கேட்கவேண்டும்.
49. அதுகளை உபதேசிக்கவேண்டும்.
50. அவரை ஸ்மரிக்கவேண்டும்.
51. பகவானை சேவிக்கவேண்டும்.
52. பயபக்தியுடன் அவரிடத்தில்நடக்கவேண்டும்.
53. தன் தாஸ்யத்தை பகவானுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும்.
54. தன்னுடைய ஸக்கியத்தை ஸமர்ப்பிக்க வேண்டும்.
55. பகவானுக்கு தன்னைத்தான் ஸமர்ப்பிக்கவேண்டும்.

ஆர். ரகுநாதராவ்.

## விசேஷக் குறிப்புகள்.

—o—

அமெரிக்காவிலுள்ள 'சிக்காகோ' பட்டணத்து தபாலாபீஸில் தபால் முத்திரை குத்தும் மின்சார யந்திரங்கள் 4 - இருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் 6 - ஆள்வேலை செய்கின்றது. ஒரு யந்திரம் ஒரு மணி நேரத்தில் 28,000 கடிதங்களுக்கு முத்திரை குத்துமாம். இப்படிப்பட்ட யந்திரங்கள் 4 - இருந்து வேலை செய்து வரும் ஆபீஸில் போக்குவரத்தாகும் தபால்கள் எவ்வள விருக்கு மென்பதை நாமே யோசித்துப் பார்த்துக் கொள்ளலாம்.

இங்கிலீஷ் கால்வாயில் இரண்டு ஸ்திரீகளும் ஒரு மனிதனும் ஒரு சிறு படகிலேறிச் செல்கையில் ஒரு புகைக்கப்பல் அச்சிறு படகின் மேல் தாக்க அது தலை கவிழ்ந்து போய் விட்டது. படகிலிருந்த மனிதன் படகு உடைந்த பலகை யொன்றைப் பிடித்துக் கொண்டு தப்பித்துக்கொண்டான். மற்றஸ்திரீகள் இருவரும் ஒருவரை யொருவர் கட்டிப்பிடித்துக்கொண்டு தவித்தார்கள். அப்பொழுது அவர்களில் ஒரு ஸ்திரீ படகிலிருந்து விழுந்தகுடையொன்றைத் தாவிப்பிடித்துச் கொள்ள அக்குடை விரிந்து அவர்களை மூழ்கிப்போக விடாமல் தாங்கிக்காப்பாற்றிற்று. தண்ணீரில் விரித்தகுடை இருவரைத் தாங்கிக்கொண்டு அமுங்காது மிதந்ததற்குக் காரணம் என்ன வென்று யோசித்துப் பாருங்கள்.

மாக்ஷிமை தங்கிய நமது மஹாராணியார் அவர் பரிவாரங்களில் இந்தியர்கள் சிலரைத்தமது பணியாள்களாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சில வருஷங்கள் முன் லண்டனில் நடந்த பொருட்காக்ஷிக்கு இத்தேசத்தி லிருந்த பல விளைபொருள்கள், செய்பொருள்கள் போனவையோடு பல ஜாதி மதஸ்தர்கள், தொழிலாளிகளும் ஷை காக்ஷி சாலையில் மாதிரி காட்டுவதற்காகக் கொண்டுபோகப்பட்டார்கள். அப்பொழுதுமுதல் மஹாராணியார் அவர்கள் தமது இந்திய பிரஜைகள் மீது அவருக்குள்ள பிரியத்தைக் காண்பிக்க இந்தியர்களில் சிலரை தமது அரண்மனை சேவகத்தி லமைத்து வைத்துக் கொண்டார்கள். அவர்களோடு தாம் நேரில் பேசவேண்டு மென்று இவ்வளவு முதிய பருவத்தில் முன்ஷி வைத்துக்கொண்டு ஹிந்துஸ்தானி பாஷையும் பேசக் கற்றுக்கொண்டார்கள். இப்பொழுது மஹாராணியார் இந்திய புணியாள்களை தாமே நேரில் அவர்கள் சுய பாஷையில் கட்டளைகளிடவும், அப்பாஷையில் சாதாரணமாகப்பேசவும் கூடுமானபாஷாபிவிர்த்தியடைந்திருக்கிறார்கள். எங்கே போனாலும் மஹாராணியார் அவர்களை விட்டுப்போவதில்லை. அவருடைய அரண்மனையில் அவர்களுக்காகத் தனியிடம் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். வெளியில் போகும் பொழுதும் அவர்களைத் தமது பரிவாரத்தோடு அழைத்துக்கொண்டு போவதன்றி அவர்கள் ஜாதி மத ஆசாரப்படி அவர்களுக்குத் தனியாக சாப்பாடு முதலியவை தேடிக்கொடுக்கும்படி உத்திரவு செய்திருக்கிறார்கள். இது அரண்மனை உத்தியோகஸ்தர்கள், காரியஸ்தர்களுக்கு அதிக தொந்தரவா யிருக்கிறதென்று அங்கிலேய பத்திரிகைகளினால் தெரிய வருகிறது. இருந்தாலும் மஹாராணியாரவர்கள் அவருடைய இந்திய பணியாள்களிடம் அதிக அபிமான முற்றவராகக்காட்டி வருவதால் அரண்மனை உத்தியோகஸ்தர்கள் அவர்களுக்கு இடையூறு ஒன்றும் செய்யத்துணியாது, அவர்கள் கூடவிருப்பதால் தங்களுக்கு விளையும் துன்பங்களைப்பற்றி மட்டும் முறுமுறுத்துப் பேசிவருகிறார்களென்று தெரிகிறது.

---

### "கிறிஸ்தியன் காலேஜ் மாகஸின்"

இப்பத்திரிகையின் ஜூன் மாதத்துச் சஞ்சிகையில், ஹாக்கன் என்பவர், கிரேக்கிய தத்துவஞானியாகிய ஸாக்ரட்டிஸ் என்பவரின் சரித்திரத்தி லிருந்து, இத்தேசத்துச் சிறுவர்கள் கற்றுக்கொள்ளக் கூடியவைகளைப் பற்றி யெழுதியிருக்கிறார். இஞ்ஞானி தன்தேசத்துக் குலாசாரங்களும் மதாசாரங்களும் நிலையின்றித் தள்ளாடிக்கொண்டிருந்த காலத்தில், அவ்வபாயத்தி னின்றும், தன்தேசத்தை விடுவித்தார். அதே அபாயத்தின் வாய்ப்பட்டுப் பரிதபிக்கும் நம்முடைய இந்தியாதேசத்தைக் காக்க விரும்பும் தேசாபிமானிகளும், அவருடைய கொள்கைகளை யனுசரிக்கவேண்டும். அவைகளிற்சிலவாவன:—

(1) தன்மனசாக்ஷிக்கு விரோதமாய் நடக்கக் கூடாது.

(2) அறிவைச் சம்பாதிக்க விரும்பின், தன் அறியாமையை முதலில் ஒத்துக்கொள்ள வேண்டும். எல்லாம் தெரிந்தவர் போல் பிதற்றலாகாது. தெரியாத விஷயத்தைப்பற்றிப் பேசப்புகலாகாது.

(3) சாதி பேதத்தைக் கொண்டு உண்மையை ஒளிக்கலாகாது. தாழ்ந்த சாதியாரையும் மெய்யறிவைப் போதித்துச் சீர்திருத்த வேண்டியது நம்முடைய கடமை.

(4) மரணம் நேரிடுங்காலத்தும் உண்மையைக் கைவிடலாகாது. கஷ்டங்களுக்கு அஞ்சிக் கடமையை அசட்டை செய்யலாகாது.

இஞ்ஞானி, எழுபதாவது வயதில், மூடர்களால் துன்பப்படுத்தப்பட்டு, பொய் சொல்லி உயிரைக் காப்பாற்றிக்கொள்ள மறுத்து விஷத்தைக் குடித்து மரித்தார்.

இதேசஞ்சிகையில் ஜான் லாஸரஸ் என்பவர்திருக்குறளைப்பற்றி யெழுதியிருக்கிறார்.

ம-ா-ா-ஸ்ரீ பி. வீரராகவலு நாயுடு நமது ஹிந்து ஜன சமூகத்தின் முற்கால தற்கால நிலைமையைப் பற்றி உற்று ஆராய்வோருக்குப்படும் சில அம்சங்களைப் பற்றி யெழுதி அங்கிலேய ஜாதியார் மேம்பட்டு வாழ்ந்து விர்த்தியடைவதற்கும், நாம் அதற்குமாறாக விருப்பதற்கு காரணமாயும் சில பேதாபேதங்களை யெடுத்துக்காட்டிச் செய்த பிரசங்கமென்றும் இச்சஞ்சிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

என் சின்னஞ்சிறு நேசர்களே! இந்த விசை உங்களுக்கு வாசிக்க எதைப்பற்றி யெழுதலாம்? போன விசை 'கோடும்புலி' யென்று தலைப்பெயரிட்டுக் கொண்டு மனுஷரில் புலிபோல் கொடுமையானவர்கள் என்று சொல்லப்பட்ட சிலவகையாரை யெடுத்துக்காட்டினேன். புலிக்குள்ள குணங்களில் கோடுமை ஒன்று. இது அம்மிருகத்தின் தீயகுணம். புலியை இன்னொரு விதத்திலும் உபமானமாகக் கூறுவதுண்டு. அதாவது அதற்குள்ள தேகவலியும் தைரிய பராக்கிரமமுமே யாம். "அவன் புலி" யென்றால் புலியைப்போல் தைரிய பராக்கிரமமுள்ள சூரன் என்று அர்த்தம் கொள்ளும். புலியைப்பற்றி இவ்வளவு பழக்கமாகப் பேசுகிறேனே. நீங்கள் எல்லாரும் புலியைப் பார்த்ததுண்டோ? புலி ஓர்காட்டுமிருகம். உங்களுடையவும் என்னுடையவும் முப்பாட்டனார்களிருந்தகாலத்தில் கிராமந்திரங்களிலுள்ள ஜனங்கள் புலி போன்ற காட்டு மிருகங்களை யடிக்கடி பார்த்திருப்பார்கள். ஏனென்றால் அப்பொழுது கிராமங்களுக்குச் சமீபத்தில் பெரியகாடுகள் அதிகமாக விருந்தன. அவைகளில் வசிக்கும் புலி, ஓநாய் முதலான கொடியகாட்டு மிருகங்கள் அடிக்கடி அந்திப் பொழுதில்கிராமங்களில்நுழைந்து இரைதேடவருவதுண்டு. இராக்காலங்களில் குடியானவர் தொழுவத்தில் கட்டியிருக்கும் ஆடுமாடுகளையும் பல சமயங்களில் குஞ்சு குழந்தைகள் மனிதர்களையும் அடித்துத்தின்று விட்டுப்போய்விடும். புலிகளில் நரமாமிசந்தின்று உருசிகண்ட ஜாதிக்கு **நரமாமிசம் தின்னி*** என்றுபெயர். இவ்வகைப் புலிகள் ஆடுமாடுகளிருந்தாலும் மோப்பத்தால் மனிதர் இருக்குமிடம் அறிந்து சென்று அவர்களையே கொன்று தின்னப்பார்க்கும். முன் காலத்தில் குடிஜனத்தொகை அதிக நெருக்கமின்றி ஜனங்கள் குடியிருப்பு ஸ்தலங்களைச் சுற்றிச் சமீபத்தில் அடவிகள்† அதிகமாக விருந்தனவால் அவற்றிலுள்ள காட்டுமிருகங்கள் கிராமங்களில்பிரவேசித்து குடிகளின் கால்நடைகளைச் சேதம்செய்து, அவர்களை இன்னும் பலவித அபாயங்களுக்கும் உள்ளாக்கி வந்தன. இப்பொழுது அந்தக்காலமெல்லாம் போய் புலியைப்பார்ப்பதும் அருமையாய் விட்டது. இதேனென்றால் நம்மையாளும் அங்கிலேயர்அரசாக்ஷியில் முன் அடவியாக விருந்த நிலங்கள் வரவர அழிபட்டு சாகுபடி நிலங்களாக மாறிவிட்டன. கவர்ன்மெண்டாரும் ஜனங்களை வதைக்கும் காட்டு மிருகங்களை வேட்டையாடிக் கொல்வோருக்கு வெகுமதி கொடுத்து கொஞ்சம் கொஞ்சமாக அவைகளை அதஞ்செய்து விட்டார்கள். இன்னமும் காட்டுப் பிரதேசமான இடங்களில் அதம்செய்து வருகிறார்கள். நாடு நகரங்கள் விசாலப்பட்டுப் பரவி நாகரீகமும் விர்த்தி ஆக ஆகக்காட்டுமிருகங்களுடைய உபத்திரவம் கட்டோடே யொழிந்து வருகிறபடியால், இக்காலத்துச் சிறுவர்கள் முற்காலத்தவர்களைப்போல் அவைகளைக் காண்பது கூடாமையாக விருக்கிறது. இப்படியே யிருந்து விட்டால் இன்னும் சில தலைமுறையில் நாடு நகரங்களில் பிறந்து வளரும் சிறுவர்களுக்கு புலி, சிங்கம், இவை யெல்லாம் ஒற்றைக்கொம்பு மிருகம் போல் கட்டுக்கதைப் பிராணிகளாகப்போய் விடுமல்லவா? அப்படிப்போனால் ஜனங்களுக்கு அபூர்வமான இயற்கைப் பிராணிகளைப் பற்றியுள்ள அறிவு இல்லாமற்போய் விடுமல்லவா? அப்படிப் போகாதபடி அபூர்வமான பிராணிகள் வஸ்துக்கள் இவற்றின் இயல்பு விவரங்களைப்பற்றிக் கற்போர் நேரில் பார்த்துப் புத்திவிர்த்தி யடையவென்று கவர்ன்மெண்டார் விநோதசாலைகளும் மிருகாதி யதிசய சாலைகளும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இவைகளைப்பற்றி இங்கு விரித்துரைக்கிற் பெருகும். உங்களில் சிலர் உங்கள் பெற்றோரோடு இம்மிருக சாலைகள் எதையாவது போய்ப்பார்த்திருக்கலாம். ஆனால் உங்களில் பெரும்பாலர் புலியென்று சொல்லக்கேட்டதன்றி அதைப்பார்த்திருக்க மாட்டீர்களென்று நினைக்கிறேன். அப்படிப்பட்டவர்கள் உபயோகத்துக்காகப் புலியின் படமொன்று சம்பாதித்துவந்ததைக் கீழே அச்சிட்டுக் காட்டுகிறேன்.



'ஸர்க்கஸ்வித்தை'

இந்தவிசை எனது சிறுதோழர் தோழிகளுக்குச் சொல்லவேண்டிய முக்கிய விஷயம் இன்னொன்றுண்டு. என் சிறு நேசர்களே! நீங்கள் 'ஸர்க்கஸ்' என்கிற வார்த்தையைக் கேள்விப்பட்டிருப்பீர்களோ?

*Man-Eater. † மரஞ்செடி யடர்ந்த காடுகள்.

'ஸர்க்கஸ் வித்தை' யென்றால் என்ன தெரியுமோ? சென்னப் பட்டணத்திலுள்ள சிறுவர்களெல்லாம் இவ்விரண்டையும் பற்றிக் கேள்விப்பட்டிருப்பார்களென்பதற்குச் சந்தேகமில்லை. 'ஸர்க்கஸ்' என்பது ஒரு இங்கிலீஷ்வார்த்தை. இதற்கு முதலர்த்தம் குதிரையோடும் 'வையாளி வீதி.' இதிலிருந்து ஆனையேற்றம், குதிரை யேற்றம், இன்னும் பல கருடி வித்தை கஸரத்துவித்தைகள் செய்யும் விளையாட்டு இடத்துக்குப்பேராய் வழங்குகிறது. இப்பேர்ப்பட்ட வேடிக்கை விநோதமான சாமர்த்திய வித்தைகள் தான்'ஸர்க்கஸ்வித்தை'.இவ்வித்தையாடிகளைத்தான் ஸர்க்கஸ்கம்பெனி' யென்று சொல்வது. இந்த ஸர்க்கஸ் வித்தையாடிகள் நமதுகிராமங்களில் வந்து வித்தையாடும் வித்தையாடிகளைப் போலவே ஊரூராய்ச் சுற்றி வித்தையாடி வருவார்கள். ஆனால் இவர்கள் அவர்களைப்போல் கேவலமாக விருக்கிறதில்லை. அங்கிலேயர்கள் அவர்கள் அனுசரிக்கும் எந்தத்தொழிலையும் கௌரவ முள்ளதாகச் செய்துகொள்வதுபோல், இந்த வித்தையாடிகளும், அவர்களுக்கேற்ற தளவாடங்களோடு வெகு கௌரவமாய்ச் சென்றுபோனவிடங்களில் யாவரும் அவர்களை மதிக்க வித்தையாடிவருகிறார்கள். இவர்கள் தாங்கள் செய்யும் வித்தைக்குவேண்டிய குதிரை, நாய், குரங்கு முதலிய பலவித மிருகங்களை வித்தையாடப் பழக்கி அவர்களோடுகூடக் கொண்டு போவதோடு அவர்கள் வித்தையாட மிகவும் பெரிதான கூடாரமொன்றும், அதைச்சுற்றி வேடிக்கைபார்க்கவரும் ஜனங்கள்உட்கார நாற்காலி 'பெஞ்சி'கள்முதலானவையும்தங்கள் சொந்தத்தில் தயார்செய்து போகு மிடங்களெல்லாம் கொண்டுபோகிறார்கள். நமது வித்தையாடிகளைப்போல் நடுத்தெருவில் கூத்தாடிவிட்டு ஒருகாசுக்கு வயிற்றி லடித்துக்கொண்டு வளையவளைய வருகிறதில்லை. அவர்கள் கூடாரத்தைச்சுற்றி மறைவுகட்டியிருக்கும். உள்ளே போகிறவர்களுக்கு அவர்கள் உட்காரும் இடம், வசதி, சௌகரியம் இவைக்கேற்க ரூ $4,3,2,1,\frac{1}{2}$ என்று பலவிதமாகக் கட்டணம் விதித்து வாசலில் சீட்டுவிற்பார்கள். அவர்கள் வரவைப் பிரமாதப்படுத்தி அவர்கள்செய்யும் வித்தைகளைப் புகழ்ந்து அதிசயமான சித்திரப்படங்கள் முதலானவைகளை தெருச்சுவறுகளில் ஒட்டி செலவைப் பார்க்காமல் கண்டோர்மனதைக் கவரும்படி விளம்பரஞ் செய்வார்கள். இல்லாத ஆடம்பரங்களெல்லாம் செய்வார்கள். செய்து கடைசியில் ஆயிரம் பதினாயிரமென்று சம்பாதித்துக்கொண்டு போவார்கள். "செய்வன திருந்தச்செய்" என்னும் நமது ஔவை வாக்கியத்தை யுணர்ந்து நடப்பவர்கள் இவர்களோ? நம்மவர்களோ? அருமைச் சிறுவர்களே! நீங்களே உங்கள் சிறு புத்தியைக்கொண்டு யோசித்துச் சொல்லுங்கள்.

இப்படிப்பட்ட 'ஸர்க்கஸ் கம்பெனி' யென்னும் இங்கிலீஷ் வித்தையாடிகள் இச் சென்னைப்பட்டணத்தில் வந்து 2-வாரமிருந்து வித்தையாடினார்கள். இப்படிப்பட்ட வித்தையாடிகள் பெரியபட்டணங்களிலன்றி நாட்டுப்புறப் பட்டணங்களில் வந்து வித்தையாடுவதில்லையால் இவர்கள் ஆடும் வித்தைகள் இன்னவை யென்பதைப்பார்த்து நாடெங்கு முள்ள என் சிறு தோழர் தோழிகளுக்குச் சொல்லவேண்டுமென்று மாயாண்டியாகிய எனக்கு ஒருஆசை யுண்டாயிற்று. ஆகவே, விவேக சிந்தாமணி பத்திராதிபரைக்கண்டு அந்த 'ஸர்க்கஸ் கம்பெனி' மானேஜருக்கு என் கருத்தைத் தெரிவித்து ஒருகடித மெழுதச்சொன்னேன். அக்கடிதத்தைப்பார்த்ததும் அந்த மானேஜர் பத்திராசிரியர்பேருக்கு மரியாதை டிக்கெட்டொன்று அனுப்பினார். அங்கிலேயர் மரியாதையறிந்தவர்கள் என்பதற்கு இது ஓர் உதாரணமாம். அந்த டிக்கெட்டில் பத்திராதிபரோடுஅவர் பெருமாட்டியையும் உள்ளேவிட எழுதியிருந்தது. (வெள்ளைக்காரர் ஸ்திரீகளிடம் எப்போதும் கணிசம் பாராட்டுவதற்கு இது ஒருஅடையாளம் பார்த்தீர்களா?) பத்திராசிரியர் எனக்காக எழுதிக்கேட்டதால் அந்த டிக்கெட்டை என்னிடம் கொடுத்தார். நான் என்னோடு என் சிறுதோழி ஒருத்தியையும் கூட அழைத்துக்கொண்டு ஸர்க்கஸ்கூடாரத்துக்குப்போனேன். அங்கேபோய் நான் பார்த்த ஆட்டங்களில்மிக அதிசயமானவை குதிரை யேற்ற ஆட்டங்களே. மற்றவையெல்லாம் கருடிவித்தையும், கஸரத்து வித்தையும், கோணங்கி, நாய், குரங்கு இவைகள் ஆடும் வேடிக்கை விளையாட்டுகளுமே. அங்கே நடந்த கசரத்து வித்தைகள் மிகநன்றாக விருந்தன. ஆனால், அவை நமதுவித்தையாடிகள் தெருவில்வந்து ஆடும் வித்தைகளை விட அருமை யானவையாக வில்லை. அவர்களைவிட இவர்கள் மிகநன்றாகவும் ஒழுங்காகவும் ஆடப்பழகி யிருந்தார்கள். அங்கே நடந்த குதிரை யேற்ற வித்தைகள்தான் மிகவும் அதிசயமாக விருந்தன. அந்த அதிசயத்தை உணர அவ்வித்தைகளை நேரில் பார்க்கவேண்டும். அவர்கள் செய்யும் குதிரை யேற்ற வித்தைகளில் சிலவற்றைச் சித்தரித்து அவர்கள் போட்டிருந்த படங்களின் அச்சுகளைவாங்கி உங்களுக்கு விளங்கத் தெரிவிக்க உத்தேசித்திருந்தேன். ஸர்க்கஸ் மானேஜரும் அப்படங்களெழுதிய அச்சுக்கட்டைகளை, அவர் ஆட்டங்களைப் பார்க்கக்கூடாத இப்பத்திரிகையை வாசிக்கும் சிறுவர்கள் சந்தோஷத்துக்காக இதில் பதிப்பித்துக் காட்ட இரவல் கொடுப்பதாகச் சொன்னார். அவர் திடீரென்று பெங்களூருக்குப் போக நேரிட்டதால் அந்த அச்சுக்கட்டைகள் கிடைக்காமற்போய்விட்

டன்: அதைப்பற்றி நான் விவரமாயெழுத விருந்ததையும் விட்டுவிட நேரிட்டது. அவ்வாட்டங்களைப் பார்த்த ஒரு சிறுதோழியை அவள்கண்ட சாக்ஷியைப்பற்றி நமது 'சிறுவர் பக்கத்துக்கு எழுதச்சொன்னேன். அவள் எனக்கு எழுதிய கடிதத்தை அப்படியே பிரசுரிக்க அவள் சம்மதிக்கவில்லை. ஆதலால் அவள் எழுதினதை மனதில்வைத்துக் கூடியவரையில் அவள் எழுதியதுபோலவே நானும் எழுதுகிறேன்:—

"நாங்கள்போகிறதற்குள் 3-ஆட்டம்ஆய்விட்டது. ஆனாலும் நான் பார்த்தமட்டும் சொல்கிறேன். ஆடுகிற இடம் 60-அடி அகல முள்ளது. அதைச்சுற்றி நிறைச்சலும் மேலே கூடாரமும் போட்டிருந்தது. அந்த தொண்டிக்குள் 20-அடி அகலமுள்ள வளைவான இட மிருக்கிறது. அதைச்சுற்றி ஒருமுழ உயரம் 2-அடி அகலத்துக்கு சுவர் எடுத்திருக்கிறது. மற்ற இடங்களிலெல்லாம் நாற்காலி போட்டிருக்கிறது. நடுவிலுள்ள வளைவுக்குள் ஒருகுதிரையின்மேல் 8-வயதுள்ள பையன் ஒருவன் ஏறிக்கொண்டு அதைச்சுற்றி ஓடுகிறான். அந்தப் பையன் ஜேணம் ஒன்றுமில்லாத அக்குதிரையின் முதுகுமேலேறிக்கொண்டு ஆடுகிறதும், குதிக்கிறதும், பின்னையும்குதிரை ஓடும்பொழுதே பாய்ந்து ஏறுகிறதும், அவன் மேலே ஏறி ஆடுகையில் மற்றவர்கள் குதிரையைச் சவுக்கால் அடிக்கிறதும், அது வேகமாக ஓடும் பொழுது ஏணிபோலுள்ள சட்டக்கதவுகள் மூன்றைக் கொண்டுவந்து குறுக்கேவைக்கிறதும், அந்தக் குதிரை ஓடிவந்து அக்கதவுகளை யெல்லாம் தாண்டிக் குதித்துக்கொண்டு ஓடுகிறதும், அந்தப் பையனும் குதிரைமேலே யிருந்துகொண்டு ஒரு பாய்ச்சலாக மேலே பாய்ந்து உடனே ஓடுகிறகுதிரையின் முதுகிலேயே நின்றபடி குதிக்கிறதும், இப்படியாக மிகவும் ஆச்சரியமாக ஆடிவிட்டு உள்ளே போகிறான். 18-வயதுள்ள பெண் ஒருத்திவந்து அவன் மாதிரி குதிரைமேலிருந்து விளையாடிவிட்டுப் போகிறாள். அப்படியே அவளைவிடப் பெரிய இன்னொரு பெண்ணும் வந்து குதிரைமேலேறி ஆச்சரியமான வேடிக்கைகள் செய்து சவாரி செய்து போகிறாள். அதேபெண் இரண்டு கம்பத்தில் கட்டிய இரும்புக் கம்பியிலேறி கீழே விழாமல் அதன்மேல் ஒத்தைக் காலால் நிற்கிறாள். அப்படியும் இப்படியும் ஆடுகிறாள். அதில் நடக்கிறாள். உட்கார்ந்து எழுந்திருக்கிறாள். அதில் சாய்ந்து கொள்கிறாள். மறுபடியும் எழுந்திருக்கிறாள். இவ்வளவும் கையை தூரவைத்துக்கொண்டு ஒரு விரற்கடை யகல் முள்ள அக்கம்பியில் கீழே விழாமல் செய்கிறாள். அப்புறம் கோணங்கிகள் வந்து வேடிக்கை செய்கிறார்கள். எல்லாரும்சிரிக்கப்பரிகாசமாய்ப்பேசிக்கொள்கிறாள். கடைசியில் நடுவிலுள்ள வளைவான பள்ளத்தைத் தண்ணீரால் நிரப்பி அதில் படுகுகளை விட்டு விளையாடுவதும், மீன்பிடிப்பதும், கடைசியில் எல்லாரும் அதில் தவறி விழுந்து, அப்புறம்தள்ளாடித்தத்தளித்துக்கொண்டு கரை யேறிப்பிழைக்கிறதுமாக நடிக்கிறார்கள். இதோடு ஆட்டம் முடிந்து போகிறது."

இந்த விசை நான் சிறுவர்க்கான பக்கத்தை வளர்த்தி இப்பத்திரிகையில் அதிக இடத்தை அடைத்துக் கொண்டேனென்று பத்திராசியர் முறுமுறுக்கிறார். ஆகையால் நான் உடனே விடை பெற்றுக்கொண்டு என் கடையை இந்த மட்டோடு கட்டுகிறேன்.

மாயாண்டி.

---

## அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி.)

## உபகார சங்கம்.

நமது விண்ணப்பத்தில் குறித்தபடி அறிவைப் பரவச்செய்யும் விஷயத்தில் நம்மோடு ஒத்துழைக்க உடன்பட்டு உபகாரிகளாக அவர்கள் பேரை ரிஜிஸ்தர் செய்துகொண்டவர்களுக்கெல்லாம் வரலாற்றுப் பத்திரிகையோடு விவேக சிந்தாமணி முதல் சஞ்சிகையும் மாதிரிக்காக அனுப்பியிருக்கிறோம். அறிவைப் பரவச்செய்வதற்கான ஏற்பாட்டின் சுருக்கத்தையும் விவேக சிந்தாமணியின் கடைசியில் பிரசுரஞ்செய்தோம். அதை வாசித்துப்பார்த்து அதில் கண்டிருக்கிற விதிகளுக்குள்பட்டு உபகாரிகளாக உழைக்கப் பிரிய முள்ளவர்களெல்லோரும் பின்வருகிறபடி வாக்குறுதி கொடுத்து நமக்குக் கடிதமெழுதக் கேட்டுக்கொள்கிறோம்.

"ஐயா;—"அறிவைப் பரவச்செய்யும் சபை ஏற்பாடு" இன்னதென்று நான் வாசித்துக் கிரகித்துக்கொண்டேன். அதில் கண்டிருக்கிறபடி அறிவைப்பரவச்செய்யும் விஷயத்தில் ஷ ஏற்பாட்டுக் குள்பட்டு ஒத்துழைக்க மனப்பூர்வமாகப் பிரியமுள்ளவனாக விருக்கிறேன். உபகாரிகள் உழைக்கவேண்டிக்கோரப்படும் விஷயங்களில் என்னாலானமட்டும் இஷ்டப்பட்டுழைக்கக் கட்டுப்பட்டவனா யிருப்பதோடு, அப்படிப்பட்ட விஷயங்கள் எதிலாவது ஒத்துழைக்க எந்தக்காரணத்

தினுலாவது எனக்குக் கூடாமையாக நேரிட்டால் அதற்குள்ள காரணகாரணங்களை எழுதித் தெரிவித்துக்கொள்ளக் கடமைப் பட்டவனுக விருப்பேனென்றும் இதனுல் வாக்குறுதி செய்து கொடுக்கிறேன். ஆகையால் என்பேரையும் உபகாரசங்கத்தில் சேர்ந்துழைக்கும் ஒருவராகப் பதிவு செய்துகொள்ளக் கேட்டுக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

பேர். ____________________

விலாசம். ____________________"

இதுவரையில் உபகாரிகளாகச் சேர்ந்தவர்களும் சேரப் பிரியமுள்ளவர்களும் ஷை வாக்குறுதிநாமாப்படிக் கையொப்பம் செய்து திருவல்லிக்கேணியிலுள்ள அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி) காரியதரிசிக்கு அனுப்பக்கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள், இந்த வாக்குறுதி நாமாக்கள் வந்ததும் இவ்வுபகாரசங்கத்து மெம்பர்கள் மாதந்தோறும் செய்யவேண்டிய உபகாரம் இன்னதென்று அடுத்த சஞ்சிகையிலிருந்து அவர்களுக்குத் தெரிவித்து வருவோம். இந்த மாசத்தில் உபகாரிகள் செய்தவேலைகள் இன்ன வென்பதைப் பற்றிச் சிலரிடமிருந்து நமக்கு ரிபோர்ட்டு வந்திருக்கிறது.

திருவனந்த புரத்திலிருக்கும் நமது உபகாரி வயது மிகச்சென்றவராயினும் (57 - வயதென்று எழுதுகிறுர்.) இது விஷயத்தில் மிக ஊக்கத்தோடும் உற்சாகத்தோடு முழைத்து வருகிறுர். விவேகசிந்தாமணி வெளியானதும் மொத்தமாக 20, 30 காபிகள் தருவித்துத் தெருக்கள் தோறும் சென்று தக்கவர்களுக்குக் கொடுத்துக் கையொப்பம் சேர்த்து அவர்களை நேரில் இது விஷயத்தில் ஒத்தாசைசெய்ய உற்சாக மூட்டி வந்ததன்றி நமது ஏற்பாட்டிற் கண்டபடி திருவனந்த புரத்தில் கிளைச்சபை யொன்றும் கூட்டி விவேகசிந்தாமணியைக்கொண்டு ஓர் பிரசங்கம் நடத்தி நமக்கு ரிபோர்ட்டனுப்பி யிருக்கிறுர். அவர் அனுப்பிய ரிபோர்ட்டு இது:—

திருவல்லிக்கேணியில் ஸ்தாபிதமாயிருக்கும் அறிவைப்பரவச்செய்யும் சபையுடைய கிளைச்சபை 1067 ஹூ ஆனிமீ 7உ ஞாயிற்றுக்கிழமை யன்று திருவநந்தபுரம் பென்ஷன் ஓவர்ஸீயர் இரங்கநாதபிள்ளை யவர்கள் வீட்டில் கூடியது.

1. ஹைகோர்ட்டு வக்கீல் சேஷையங்கார் அக்கிராசனராயிருந்தார். 13-மாணுக்கரும்5-பெரியவர்களும் கூடியிருந்தனர்.

2. சீப் எஞ்சினீர் ஆபீசு ஹெட் கிளார்க்கு சுப்பையாப்பிள்ளை விவேகசிந்தாமணியை வாசித்தார்.

3. அதற்கு இரங்கநாதபிள்ளை வியாக்கியானம் உரைத்தார்.

4. அறிவு இன்றியமையாத தென்பதைக்குறித்து வாசித்துக்காட்டி அர்த்தம் பண்ணினதில் மாணுக்கர்களுக்கும் மற்றவர்களுக்கும் மனசில் சில நூதன அறிவு பரவினதால் பாலகர் அகமகிழ்ந்து ஈஸ்வரனுக்கு ஸ்துதி செலுத்தினர்.

5. ஷை சபையின் காரியதரிசி சுவாமிநாத ஐயரவர்கள் அறிவை பரவச்செய்யும் சபை என்ற ஆலம் விதையை நட்டு மூன்று மாசமாகிறது. அதில் ஒரு கிளை 500 மயில் தூரமான திருவனந்தபுரத்துக்கு வளர்ந்து எட்டி கிளைச்சபை ஒன்றை ஸ்தாபித்திருக்கிறது. ஸ்ரோச்சு என்னும் பட்டணத்தில் ஏகதேசம் 12 நாழிகைத்தூரத்தில் ஒரு பெரியவட விருக்ஷம் நிற்கிறது. அது ஏகதேசம் 4 எக்கர் விஸ்தாரத்தில் படர்ந்திருக்கிறது. அதினுடைய அடியில் 10,000 பேர் உட்கார குளிர்ந்த நிழலுண்டு. அது போலவே இந்த கிளைச்சபையும் 10,000 பேருக்கு அறிவென்னும் சிரேஷ்ட தண்ணிழலை கொடுக்கவேண்டுமென்று ஸ்வாமியையும், பிறகு சுவாமிநாதய்யரவர்களையும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்''

சென்னையிலுள்ள அறிவைப்பரவச்செய்யும் சபை மெம்பரும் அதன் உபகாரியுமாகிய பண்டிதர் கே. கோபாலாசாரியார் அவர்கள், தஞ்சாவூர் ஜில்லாவில் சில விடங்களை நேரில் விஜயஞ்செய்து இச்சபைக்கு ஒத்தாசையாக மிகவுழைத்துவந்திருக்கிறுர். அவர் நாச்சியார்கோவில், மன்னுர்குடி, ஏனங்குடி முதலான விடங்களில் அனேகரை நேரில் கண்டு பேசி விவேகசிந்தாமணிக்கு அநேகவகை கையொப்பங்கள் சேர்த்துவந்திருக்கிறுர். மன்னுர்குடியில் இவரோடொத்து நின்று இவருழைத்ததற்கு ஒத்தாசையாக விருந்துதவிய முனிசிபல் சேர்மேன் வெங்கடராமய்யர் அவர்களுக்கும் மற்ற கனவான்களுக்கும் நாம் இருதய பூர்வமாய் வந்தனமளிப்பதோடு அவர்கள் இதுவிஷயத்தில் உற்சாகம் குன்றுது விடாமுயற்சியோடுழைத்து வருவார்களென்று கோருகிறோம்.

நமது புதுவாயல் உபகாரியும் இது விஷயத்தில் அதிக சிரத்தையோடுழைத்துவருகிறதாகச் செய்தியெட்டியிருக்கிறது.

பாளையங்கோட்டை, சங்கரநாயனுகோயில், இவ்விடங்களிலுள்ள நமது உபகாரிகளும் இது விஷயத்தில் பாடுபட்டுழைத்துவருகிறுர்களென்று அறிகிறோம். மற்ற உபகாரிகளும் இச்சபைக்காக அவரவர்கள் உழைக்கும் உழைப்பையும் அதன் பயனையும் அப்போதைக்கப்போது நமக்கு எழுதித்தெரிவிப்பார்களென்று கோருகிறோம்.